*Kumaran̲*

*Āram 8, muttu 28*

*March 05, 1931*

Record no. 313

Reg. No. M. 1823. 16 பக்கங்கள். விலை 0-1-6.

# குமரன்

The "KUMARAN" Published Every Thursday.

ஆரம் அ } காரைக்குடி பிரமோதூத-ஞு மாசி-மீ" உ௩-உ வியாழக்கிழமை (5—3—1931.) { முத்து உஅ

ஆயிரக் கணக்கான நற்சாட்சிப் பத்திரங்களும், தங்க மெடல் களும் பரிசு பெற்றது.

# டாக்டர் சிங்காரம்

## அவர்களின் உலகப் பிரசித்தி பெற்ற உண்மையான மருந்துகள்.

## காமகேசரி குளிகை.

**(தங்க பஸ்பம் சேர்ந்தது.)**

**தாது புஷ்டிக்கு கைகண்ட மருந்து.**

இம் மாத்திரைகள் தாதுபுஷ்டியையும், தளர்ந்த நரம்புகளை கெட்டி படுத்துவதிலும் பிரசித்திபெற்ற பலவித மூலிகை சரக்குகளும் அசல் தங்க பஸ்பமும் சேர்த்து சாஸ்திரமுறைப்படி தயார் செய்யப்பட்டது.

வயது சென்றதாலும், மிதமிஞ்சிய சம்போகத்தாலும், பலவித துர் அப்பியாசங்களாலும், இழந்துபோன ஆண்தன்மையானது இம்மாத்திரைகளை சாப்பிட ஆரம்பித்தவுடன் மீண்டும் அபிவிருத்திச் செய்கிறது. பலக்குறைவு, கைகால் அசதி, சோம்பல், இடுப்புவலி, சம்போக காலத்தில் ஏற்படும் நரம்புத் தளர்ச்சி, துரித ஸ்கலிதம், சொற்பன ஸ்கலிதம் முதலிய கொடிய வியாதிகளைப் போக்கும். சரீர புஷ்டியும், நிரோக சரீரமும், வீரிய விருத்தியும், அதிகரித்த ஆண் தன்மையும் உண்டாகும். தளர்ந்த நரம்புகளை கெட்டிப்படுத்தி இல்லற இன்பத்தை முற்றிலும் அனுபவிக்கச் செய்யும். யாதொரு பத்தியமில்லை.

80 மாத்திரைகள் விலை ரூபா 10—0—0.
40 மாத்திரைகள் விலை ரூபா 5—8—0.

## மஹா சந்தன தைலம்.

**(ஓர் யோகீஸ்வரரின் அநுபவ முறை.)**

இத் தைலத்தில் அநேகவித பச்சிலை மூலிகைகள் சேர்ந்திருப்பதால் சரீரத்திலுள்ள எவ்வித உஷ்ணத்தையும் நீக்கி குளிர்ச்சியைக் கொடுப்பதுடன் கண்களில் உண்டாகும் பலவித வியாதிகளையும் ஆச்சரியமாய் குணம் செய்கிறது. கண்பார்வை மந்தமாயிருப்பவர்கள் இத் தைலத்தை உபயோகித்தால் கண்களுக்கு நல்ல பார்வை உண்டாகும்.

கண் எரிச்சல், கண்ணில் நீர் வடிதல், கண் கூச்சம், கண் குத்தல் சதை வளர்தல், மேகநீர், வெள்ளெழுத்து, மண்டையிடி, ஒற்றைத்தலை நோய் பீனிசம், காதுநோய், காது மந்தம், வெட்டைச் சூட்டால் உண்டாகும் தேக காந்தல், கிறுகிறுப்பு, மயக்கம், உள்ளங்கை உள்ளங்கால் எரிச்சல், மூளைக் கொதிப்பு, நித்திரையின்மை, தலைமயிர் உதிர்தல் முதலிய சகலவித நோய்களையும் குணம் செய்வதுடன் சரீரத்திலுள்ள எவ்வித உஷ்ணத்தையும் நீக்கி கண்களுக்கும், மூளைக்கும் குளிர்ச்சியைக் கொடுக்கும்.

இத் தைலத்தை ஆண் பெண் யாவரும் ஸ்நானம் செய்யலாம் இத் தைலத்தை உபயோகித்தவர்கள் புகழ்ந்து எழுதும் கடிதங்கள் நாள்தோறும் நமக்கு வந்து குவிகிறது. ஒரு முறை உபயோகித்துப் பார்த்தால் இதன் உண்மை விளங்கும்.

24 அவுன்ஸ் டின் விலை ரூபா 4—0—0.
12 அவுன்ஸ் டின் விலை ரூபா 2—2—0.

வி. பி. தபால் செலவு பிரத்தியேகம்.

முழு விலாசம் தெரிவிப்பவர்களுக்கு கேட்லாக் இனமாய் அனுப்பப்படும். மலாய்நாட்டு வாசிகள் ஆர்டருடன் ரூபா 5 அனுப்பவும்.

**டி. சி. சிங்காரம் அன்கோ.,**
தெப்பக்குளம் போஸ்ட்,
திருச்சினாப்பள்ளி.

---

வெளிவந்து விட்டது! வெளிவந்து விட்டது!!

# ஹாத்திம் தாயி

## அல்லது சபாரஞ்சிதம்.

இணையில்லா அற்புத தீர வீரச் செயல்களடங்கிய நூல்!
கையிலெடுத்தவர் முடியும் வரை கீழே வைக்கப்பிரியப்படாத நூல்!

பாரஸீக பாஷையில் ஆக்கப்பட்ட இந்நூல் பற்பல பிறபாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டும், சினிமாக்களில் படக்காட்சிகளாக காண்பிக்கப்பட்டும் வருவதை யாவரும் அறிவீர்கள். இனிய தமிழில் எளிய நடையில் எழுதப்பட்டுள்ள இந்நூலில் காணப்படும் ஹாத்திமின் தீர வீரச்செய்கைகள் படிப்போர் மனத்தைப் பரவசமுறச் செய்வதும், காதற் கதைகள் தேகத்தைப் புளகமுறவும் செய்யுமென்பதில் ஐயமில்லை. கருணைக்கடலாகிய ஹாத்திம் தன்னலம் பேணாது தம்முயிரையும் பிறர் சேவையில் ஈடுபடுத்தி இன்னல்களிடையே செல்வது மிகவும் போற்றிப் புகழத்தக்கதாயிருக்கும். 610 பக்கங்கள் கொண்ட இப்பெரிய நூலில் பற்பல ஆப்டோன் படங்களுண்டு. கண்ணைக்கவரும் பான்மையில் டக்ஸின் பைண்டு செய்யப்பட்டு மேற் போர்வையும் போடப்பட்டிருக்கிறது.

விலை ரூபா 2—12—0 தான். வி. பி. வேறு
மொத்தமாக வாங்கும் வியாபாரிகளுக்குத் தக்க கமிஷன் கொடுக்கப்படும்.

**தாருல் இஸ்லாம் புஸ்தகசாலை,**
நெ. 22 பிராட்வே, தபால் பெட்டி 15, சென்னை.

---

# பார்ஸன்ஸ் தளக்கற்கள்.

மிகக்குறைந்த விலையில் உறுதியானதும், தேயாததும், பாலிஷ் உள்ளதுமான கற்கள் இதுவே. சிகப்பு, மஞ்சள், கருப்பு நிறங்களில், ஆறுபட்டை சதுரம் முதலிய பல வைஸ்களில், பல டிஸைன்களில் போடலாம்.

**ஸ்டாக்குகள் ஏராளமாய் இருக்கின்றன.**

**ராவல் அண்டு கம்பெனி,**
கல்லுக்கட்டி, காரைக்குடி.

---

# பொன்னுங்காணித்தைலம்.

## இஃது ஒன்றே உண்மையில் பொன்னுங்காணித்தைலமென்பது.

தஞ்சை சமஸ்தான முறையிற் செய்யப்பட்டது.

இத்தைலம் பற்பல மூலிகைகளினாலும் உயர்ந்த சரக்குகளாலும் ஆயுர்வேத முறைப்படி தயாரிக்கப்பட்டது.

இது குணத்திற் சிறந்தது. ஒரு முறை வாங்கி உபயோகிக்கின் குணம் நன்கு விளங்கும்.

நமது பொன்னுங்காணித்தைலத்தால் தீரும் வியாதிகள்.

சிரசிற் சுண்டுவிழுதல், மயிர் உதிர்தல், கண்களிலேற்படும் மங்கல், எரிச்சல், புகைச்சல், நீர்வடிதல், தலைபாரம், மயக்கம், பீனசம் காதில் ஏற்படும் குத்தல், குடைச்சல், சீழ்வடிதல், தேகத்திலேற்படும் தேமல், சொரி, சிரங்கு, கற்றாழைநாற்றம், வெட்டைச்சூடு, நீர்க்குத்தல், நீரெரிவு, கை கால்க்கடுப்பு, மூட்டுகளின் பிடிப்பு முதலான அநேக வியாதிகளைச் சொஸ்தப்படுத்தும்.

இத்தைலம் 15 வருஷகாலமாகத் தயாரிக்கப்பட்டு உள்நாடுகளிலும் பினாங்கு சிங்கப்பூரென்னும் வெளிநாடுகளிலும் நண்பர்களுக்கு அனுப்பப்பட்டு உபயோகித்து வருவதில் நற்சாக்ஷிப்பத்திரங்களும் கிடைத்திருக்கின்றன. வாஸ்லைனுக்கு பதிலாக இத் தைலத்தையே உபயோகிக்கின் மேற்கண்ட வியாதிகளை சொஸ்தப்படுத்துமென்பதற்கையமில்லை.

ஆகலின் மிக்க குணம்வாய்ந்த இத்தைலத்தை நண்பர்கள் வாங்கி யனுபவித்து நமது நாட்டு வைத்திய முறையை ஆதரிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

**தாதுபுஷ்டிக்கு வேண்டிய சாலாமிசிரி லேகியமும் கிடைக்கும்.**

விலை விபரம்.

18-பலம் கொண்ட டின் ரூ. 5—0—0.
சாலாமிசிரி லேகியம் சேர் 1-க்கு ரூ. 5—0—0.

தபாற்செலவு வேறு.
வெளிநாடுகளுக்கு முன்பணம் அனுப்பவேண்டும்.

கிடைக்குமிடம்:—
வீ. ஆறுமுகம்பிள்ளை,
மருந்துக்கடை, கீழச்சத்திரம்
சமீபம், காரைக்குடி.

இங்ஙனம்,
மு. க. வடிவேல் முதலியார்,
நேட்டிவ் டாக்டர், கண்டனூர்,
ராமனாதபுரம் ஜில்லா

78

வாரப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௨-0-0
ஆறு மாதம் ௧-0-0
பிரதி ௧-க்கு 0-௧-௬
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. ௩-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. 0-௧௨-0
வெளிநாடு வருடம்
ஒன்றுக்கு ௧-௪-0
வருடம் ஆடி ௴ ஆரம்பம்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.



எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

## நாள் செய்வது நல்லோர் செய்யார்.

திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் எழுதியது.

நம் தமிழ் நாட்டுப்பழமொழிகளில் இதன் பொருள் வெள்ளையாக விளங்குகிறது. அதாவது நாள் செய்யக்கூடியதை நல்லவர்கள் செய்யார்கள் என்பதே. ஆனால், நாள் செய்கின்ற நன்மையை நல்லோர் செய்யாரா? நாள் செய்கின்ற தீமையை நல்லோர் செய்யாரா? என்ற ஐயப்பாடு நமக்கு உண்டாகின்றது. ஏனெனில், இதை இப்பழமொழி விளக்கிக் காட்டவில்லை. ஆகவே இதன் உண்மைப் பொருளை நாம் அறிந்து கொள்ள வேண்டியவர்களாக இருக்கின்றோம். ஒரு புலவர் இதற்குப் பொருள் கூறும் பொழுது "சாஸ்திரம் அறிந்தவர்களைக் கொண்டு பஞ்சாங்கம் பார்த்துக் குறிப்பிட்ட ஒரு நல்ல நாளில் செய்யப்பெறும் சுபகாரியங்கள் பெரும் பயனைத்தரும். இவ்வளவு பெரும்பயனை நல்லவர்கள் சொற்படி நடந்து பெறுதற்குமுடியாது" என்று கூறினார். இது உண்மையாகுமானல், நல்ல நாள் பார்த்து அஸ்திவாரம் போட்டு, நிலைவைத்துக்கட்டிய வீடு கிரஹப்பிரவேசம் செய்த மறுநாள் விழுவானேன்? நல்லநாள் பார்த்து கடைவைத்த வியாபாரிகள் இன்சால்வென்ட் ஆவானேன்? நல்ல நாள் பார்த்து ஊர்ப் பயணம் சென்றவர்கள் திரும்பிவாராமல் போவானேன்? நல்லநாள் பார்த்து சாந்திமுகூர்த்தம் செய்தவர்களுக்குக் குழந்தை பிறக்காமற் போவானேன். குளிசத்தைப் பார்த்து பிரேதத்தை எடுத்து, குளிசத்தைப் பார்த்து பால் தெளித்து, நல்லகிழமை பார்த்துக் கருமாதி செய்த வீட்டில் மறுபடியும் சாவு விழுவானேன்? நல்ல நாள் பார்த்துச் சொல்லுகின்ற ஐயர்களின் வீட்டில் மொட்டத்தலையும், வெள்ளைச் சேலையும் அதிகமாக உலாவுவானேன்? நல்ல நாள் பார்த்து நல்ல ஹோம் பார்த்துத் தாலிகட்டுகின்ற இந்திய நாட்டில் மட்டும் 15 கோடிப் பெண்களில் 2½ கோடிப் பெண்கள் விதவைகளாகவும் அதிலும் 15 வயதுக்குக் கீழ்ப்பட்ட வாலிபமான விதவைகள் 3,91,147 பேரும், 10 வயதுக்குட்பட்ட பால்யவிதவைகள் 1,15,285 பேரும் 5 வயதுக்குட்பட்ட அறியாவிதவைகள் 19,487 பேரும் ஒரு வயதுக்குட்பட்ட சிசுவிதவைகள் 1064 பேரும் இருப்பானேன்? நாளும், கோளும் பாராத புறச் சமயத்தினர்களிடம் இக்கொடுமைகளும், கொடுஞ் செயல்களும் காணாமற்போவானேன்? என்ற ஐயப்பாடுகள் நமக்கு உண்டாகின்றன. மற்றொரு புலவர் மேற் கூறிய பொருளை மறுத்து வேறு பொருள் கூறினார். அதாவது ஒருவனுக்குக் கோபம் அதிகமாகவிருக்கும்பொழுது நல்லவர்கள் அவனைச் சாந்தப்படுத்தமுடியாது. ஆனால் நாளானது சிறிது சிறிதாக அவனுடைய கோபத்தைத் தணித்துவிடும். சகிக்க முடியாத துன்பத்தின் காரணமாக, ஒரு மனிதன் தூக்கிட்டுக் கொண்டு மாணமடைய எண்ணும்பொழுது அவனுக்கு நல்லோர்கள் எவ்வளவு கூறினும் ஏற்றுக் கொள்ளான். ஆனால், நாளானது செல்லச் செல்ல அவனுடைய எண்ணத்தை மாற்றிவிடுகிறது. கெட்ட எண்ணமும், கெட்டபழக்கமும் உடையவர்களை நல்லோர்கள் திருத்திவிட முடியாது. ஆனால், நாட்களானது பல நாட்கள் ஆவதின் மூலம் அவனுடைய எண்ணத்தையும், பழக்கத்தையும் மாற்றி நன்னிலைக்குக் கொண்டு வந்துவிடும். ஆகவே நாள் செய்கின்ற நன்மையை நல்லோர்களால் செய்ய முடியாது என்பதே.

முதற்கூற்றைவிட இரண்டாவது கூற்றில் சிறிது அறிவு கலந்திருக்கின்றது. அது ஒருவகையில் ஒப்புக்கொள்ளக்கூடியதே எனினும், ஆராய்ச்சியில் நிலைத்து நிற்காது. ஏனெனில் 'பழக்கம்' என்பதில் சில மாறுதலடைந்தாலும் பொய்கூறுதல், குடித்தல் முதலிய பழக்கங்களை நாட்களால் மாற்ற முடிவதில்லை. அதற்குப்பதிலாக நாட்கள் அதிகமாகவே வளர்ந்துவிடுகின்றன. 'எண்ணம்' என்பது ஒரு நிமிடத்தில் ஆயிரக்கணக்காக மாறக்கூடிய தன்மை வாய்ந்தது. கோபம் என்பது வினாடிக்கணக்கில் மாறிவிடும் இயல்பு வாய்ந்தது. ஒருவனுக்கு 1000 ரூபாய் தருகிறேன், ஒரு நிமிடத்திற்கு மூக்கிலிருந்த கோபத்தை வரவழைத்துக்காண்பி என்றால் அவனாலேயே முடியாது. அறிவுடைய மக்களிடத்திற் காணப்படுகின்ற சினம் நீர்கிழிய வெய்த வடுப்போல மாறிவிடும். இத்தகைய மக்களின் கோபத்தை நல்லவர்களாலும் மாற்றிவிட முடியும். ஆகவே, இப்பொருளைக்கொண்டுதான் இப்பழமொழி பிறந்தது என்று எண்ணுவதற்கில்லை. ஆகவே இதன் உண்மைப் பொருள்தான் என்னவென்று ஆராய்ச்சி செய்யும்பொழுது நமக்கு ஒரு கதை ஞாபகத்திற்கு வருகிறது.

குப்புச்சாமி என்பவன் நாகப்பட்டினத்தில் இருப்பவன். அவனுக்கு மாத வருமானம் ரூ 20. தாயும், தந்தையும், தமக்கையும், உறவினருமில்லை. தன் கையால்தானே சமைத்து உண்டு வருவதைக்கண்ட சில நண்பர்கள் திருச்சிராப்பள்ளியில் ஒரு பெண்ணைப் பார்த்து மணமுடித்து வைத்தனர். பெண் கர்ப்பவதியானாள். ஏழாவது மாதமாகிய தை மாதத்தின் இறுதியில் கட்டுச்சோறு கட்டிப் போடுவதற்கு நல்ல நாள் பார்த்து, சூலம் பார்த்த ஐயருடைய அனுமதியின் பேரில் திருச்சிக்குப் பெண் வீட்டார் அழைத்து வந்தார்கள். அழைத்து வந்த மாதம் தை மாதம் என்பதை வாசகர்கள் மறந்து போக வேண்டாம். திரும்பப் பெண்ணை அனுப்பவில்லை. சில நாள் பொறுத்து குப்புச்சாமி திருச்சிக்குவந்து பெண்ணை அனுப்பும்படி கேட்டான். மாசி பிறந்துவிட்டது, 8-வது மாதம் அனுப்பப்படக்கூடாது என்று சொல்லிவிட்டார்கள். குப்புச்சாமி நாகைக்குச் சென்று பங்குனி எப்பொழுது பிறக்குமென்று ஆவலோடு எண்ணிக்கொண்டே, கவலையோடு சமைத்து உண்டான். பங்குனி பிறந்தது. குப்புச்சாமி திருச்சிக்கு வந்து மனைவியை அழைத்தான். மனைவியின் பாட்டி "பிரசவக்குறி தோன்றுகிறது, நிறைமாதத்தில் இரயில் பிரயாணம் செய்வது நல்லதல்ல. இப்போது அனுப்பினாலும் பிரசவத்திற்கு மறுபடியும் இங்குதானே அழைத்துவர வேண்டும். தாயும் பிள்ளையும் வேறாக்கி அனுப்புகிறோம்" எனக் கூறினாள். குப்புச்சாமி நாகைக்குச் சென்று தன் பழைய தொழிலைக் கைக்கொண்டான். அவர்கள் சொற்படி பங்குனியிலேயே குழந்தையும் பிறந்தது. குழந்தை பிறந்த 16-ம் நாள் குப்புசாமி திருச்சிக்கு வந்து வீட்டிற்கு அழைக்கும் சடங்கில் கலந்துகொண்டு அடுத்த நாள் நாகைக்கு அழைத்தான். '30 கழிக்கட்டும்' என்று பாட்டி கூறினாள். 30 நாள் கழித்து சித்திரை மாதம் குப்புச்சாமி மிக்க ஆவலோடு மனைவியை அழைத்துப்போக திருச்சிக்குவந்து சேர்ந்தான். குழந்தை பிறந்த இரட்டித்த மாதம் ஆதலால் அனுப்பமுடியாது, மூன்றாவது மாதம் அழைத்துப்போகலாம் எனக் கூறினார்கள். குப்புச்சாமி வருத்தத்துடன் நாகைக்குச்சென்று தனது தொழிலை மறுபடியும் கைக்கொண்டான். அவனுடைய சமயல் வேலை சம்பாதிக்கும் வேலைக்கு இடையூறு செய்தது.

மூன்றாவதுமாதமாகிய வைகாசியும் பிறந்தது. பாவம்! மனைவியின் பாட்டி மண்ணுலக வாழ்க்கையைத் துறந்த செய்தி குப்புச்சாமிக்கு அறிவிக்கப்பெற்றது. குப்புச்சாமி கருமாதி வரை காத்திருந்து திருச்சிக்கு வந்து கருமாதி முடிந்த மறுநாள் பெண்ணை அனுப்பும்படி வேண்டினான். 30 கழிக்கட்டும் என்றார்கள். வாய்பேசாது போய்விட்டான். கிழவி இறந்த 30 நாட்கள் கழித்த ஆனி 3உ அன்புடன் மனைவியை அழைத்துப்போக திருச்சிக்கு வந்தான். பெண்வீட்டார் "நாலாவது மாதம் இரட்டித்த மாதமல்லவோ! அனுப்பிவைக்க முடியவில்லையே" என்று மிகவும் வருத்தத்துடன் கூறி "ஐந்தாவது மாதம் எவ்வித ஆட்சேபணையுமில்லாமல் அழைத்துப்போகலாம்" எனக்கூறினார்கள். போய்விட்டான்.

குப்புச்சாமிக்குக் கவலை அதிகமாயிற்று. வேலைத் தொந்தரவுகள் அதிகம். சமையல் செய்ய முடியாமல் ஓட்டல் சாப்பாடு சாப்பிட ஆரம்பித்தான். மிளகாய்ப்பொடி அவன் உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை எனினும் வெகுகஷ்டத்துடன் 30 நாட்கள் கழித்துவிட்டு 5-வது மாதம் பிறந்ததும் மனைவியை அழைக்க திருச்சிக்கு வந்தான். "ஐயோ! ஆடி அடிபெடுத்து வைக்கக்கூடாதே! எப்படி அனுப்புவோம்!" என்றார்கள். குப்புச்சாமிக்கு நாட்களின் மீது வந்த கோபம் அதிகம். என் செய்வது? நாகைக்குப் போய் ஓட்டல் உணவு உண்டு ஆடிமாதத்தை கழித்துவிட்டு ஆவணி பிறந்து திருச்சிக்கு வந்தான். கதையை வளர்ப்பானேன்? ஆவணி 6-வது மாதம் இரட்டித்த மாதம் என்றார்கள். மறுபடியும் வேதாளம் முருங்கைமரத்தில் ஏறிக்கொண்ட கதையை எண்ணி ஊருக்குப்போய்விட்டான். ஏழாவது மாதமாகிய புரட்டாசி பிறந்தது. குப்புச்சாமி திருச்சிக்கு வந்தான். மாதம் பிறந்த கிழமை ஞாயிறு என்பதை வாசகர்கள் மறக்கவேண்டாம். பெண் வீட்டார் மருமகனை நன்கு உபசரித்தனர். பெண்ணை அனுப்பும்படி குப்புச்சாமி வேண்டினான். "இன்று மாதப்பிறப்பு நாளை அழைத்துப்போகலாம்" என்றார்கள், 2உ திங்கட்கிழமை "கிழக்கேசூலம்" என்றார்கள். 3உ செவ்வாய்க்கிழமை "நிறைந்த கட்டுக்கழுத்தியை வீட்டைவிட்டு அனுப்பக்கூடாது" 4உ புதன்கிழமை "பிறந்தநாள் அனுப்பக்கூடாது" என்றார்கள். 5உ வியாழக்கிழமை "பாட்டிமை" என்றார்கள். 6உ வெள்ளிக்கிழமை "கட்டுகழுத்தியை வீட்டைவிட்டு அனுப்பக்கூடாது" என்றார்கள். 7உ சனிக்கிழமை "கிழக்கே சூலம்" என்றார்கள். பாவம்! குப்புச்சாமி மிகப்பொறுமையாக இந்தமுதல் வாரத்தைப் போக்கினான். அடுத்த வாரம் பிறந்ததும் அழைத்துப்போக எண்ணங்கொண்டான் குப்புச்சாமி. 8உ "பரணி" 9உ திங்கள் "கிழக்கே சூலம்." 10உ "அனுப்பமுடியாது." 11உ புதன் "பிறந்தநாள்." 12உ வியாழன் "மரணயோகம்." 13உ "அனுப்பமுடியாது" 14உ சனி "கிழக்கே சூலம்" என்ற பதில் கிடைத்தது. இதன்படி இரண்டாவது வாரத்தையும் தொலைத்து விட்டார்கள். குப்புச்சாமி வருந்துகிறான். பாவம்! அவன் வாக்கிவைத்த விடுமுறை தீர்ந்துபோயிற்று. என்றாலும் மூன்றாவது வாரத்தில் மனைவியை அழைத்துப்போகலாம் என்ற நம்பிக்கையோடிருந்தான். மூன்றாவது வாரம் பிறந்தது. அவ்வாரத்தில் திங்களும் சனியும் கிழக்கே சூலம் என்றார்கள். வெள்ளியும் செவ்வாயும் அனுப்பமுடியவில்லையே என்று வருந்தப்பட்டார்கள். புதன் பிறந்த நாளாகப் போயிற்று. வியாழனும், ஞாயிறும் நட்சத்திரம் நன்றாகவில்லை என்ற பதில் வந்தது. அவனுடைய மூன்றாவது வாரமும் போயிற்று என்பதை குப்புச்சாமி அறியான். 4 வது வாரத்தில் கண்டிப்பாய் அனுப்பிவிடுவார்கள் என எண்ணிக்கொண்டு நம்பிக்கையோடிருந்தான். அவ்வாரத்தின் மேற்கூறியபடி 5 நாட்கள் போக வியாழனும் ஞாயிறும் நட்சத்திரம் பிசமோசமாக இருந்தது. ஞாயிற்றுக்கட்டும் 28 நாட்கள் போக, 29உ ஞாயிறு கிளைசு. 30உ திங்கள் "கிழக்கே சூலம்" என்ற பதில் வந்தது. புரட்டாசி மாதத்தில் வேறு நாட்கள்

(14-ம் பக்கம் பார்க்க)

## இருதரப் பினருக்கும் 144.

காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகாமையிலுள்ளமைதானமொன்றில்அரியக்குடி தேவஸ்தானகாரியக்காரர்களும்இலுப்பக்குடி தேவஸ்தானகாரியக்காரர்களும்பிரவேசிக்கக்கூடாதென்று தடுப்பதாக பிப்ரவரிமீ 25-உ தேவகோட்டை சப் டிவிஷனல் மாஜிஸ்டிரேட் 144 செக்ஷன்படி தடை யுத்தரவு பிறப்பித்துள்ளார். நீண்ட காலமாக அந்த நில சம்பந்தமாக இரு தேவஸ்தானங்களுக்கும் சச்சரவு இருந்து வருகிறது. அது சம்பந்தமாகப் பல வழக்குகளும் தீர்ப்பாகாமலிருக்கின்றன. அரியக்குடி தேவஸ்தான தர்மகர்த்தா முதலியவர்கள் அத்து மீறி அந்த மைதானத்தில் பிரவேசித்து அங்குள்ள தூண்களையும் ஸ்தம்பங்களையும் வீழ்த்தியதாக அவர்கள் மீது இலுப்பக்குடி தேவஸ்தான காரியஸ்தர்கள் சென்ற வருஷம் ஜூலை மாதம் வழக்குத் தொடுத்துள்ளனர். அந்த வழக்கு சம்பந்தமாக திருப்பத்தூர் சப் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் விசாரணை நடைபெற்று வருகிறது. இந்நிலையில் அரியக்குடி தேவஸ்தான தர்மகர்த்தா முதலியோர் தங்கள் பிரதி வாதிகள் அம் மைதானத்தில் கட்டிடம் கட்டாதிருக்கும்படி அவர்களுக்கு 144 செக்ஷன்படி தடையுத்தரவு பிறப்பிக்கும்படி மனுக்கொடுத்தனர். அம் மனுவை தேவகோட்டை சப் டிவிஷனல் மாஜிஸ்டிரேட் விசாரித்து மேற் குறித்தவாறு தடை யுத்தரவு பிறப்பித்தார்.

—

### ரயில்வேச் செய்தி.

மார்ச்ச கஉ முற்பகலில் இண்டோ—சிலோன் மெயில் இந்த வழியாகச் செல்கிறது. அதில் தான் தபால் வந்தது. இப்போது முற்பகல் 10-10 க்கு மெயில் வந்துவிடுகிறபடியால் பகல் பன்னிரண்டு மணிக்கு தபால் பட்டுவாடா செய்யப்படுகிறது. பிற்பகல் மூன்றுமணிக்கு தபால் கட்டப்படுகிறது. தபால் பார்த்து உடனே பதிலெழுதுதற்கு இந்த மாற்றம் மிகுந்த சாதகமாகிவிட்டது. போட் மெயில் வரும் போது ஸ்டேஷனில் ஜனக்கூட்டம் அதிகமாக இருக்கிறது. வண்டிகளில் நிறையப் பல தேசத்துப் பிரயாணிகளும் செல்வது இங்கே புதுமையாக இருக்கிறது. சென்னையிலிருந்து வரும் ராமேசுவரம் எக்ஸ்பிரஸ் நடு இரவில் வருகிறது. ரயிலடிக்கும் ஊருக்குமிடையிலுள்ள ரோடு மிகச்சிர்க்கெட்டுக்கிடப்பதால் பிரயாணிகட்கு மிகக் கஷ்டத்தைத் தருகிறது. இரவில் வரும் ஜனங்கள் அங்கேயே தங்கியிருப்பதற்கும் போதிய வசதியில்லை. ஊருக்குள் செல்வதற்கும் வண்டிகள் சில சந்தர்ப்பத்தில் கிடைப்பது சிரமமாக இருக்கிறது. எல்லா வண்டிகட்கும் சரியாக மோட்டார் சர்வீஸ் இருக்கிறது. நாளுக்கு நாள் ரயில்வேஸ்டேஷனைச்சுற்றிக்கட்டிடங்களும் காம்பவுண்டுகளும் வளர்ந்துவருகின்றன. ஸ்டேஷனுக்கும் டவுனுக்கும் இடையிற்கிடக்கும் இடத்திலுள்ள வழக்குகள் தீர்ந்துவிடுமாயின் வெகுவிரைவாக இடங்கள் விற்கப்பட்டுக்கட்டிடங்களாகக்கூடும். ரோடு வேலையும் மெதுவாக நடந்துகொண்டிருக்கிறது. ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் கொட்டகைபோட வேண்டியது மிகவும் அவசியமாகும். இப்பொழுது வெயிலால் மிகக் கஷ்டமாகஇருக்கிறது.

### புதிய ரயில்வே கால அட்டவணை.

மார்ச்சமீ கஉ முதல் ரயில் போக்குவரத்தில் பல மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. விவரம் வருமாறு:—

காரைக்குடியிலிருந்து திருச்சிப் பக்கம் செல்லும் வண்டி புறப்படும் நேரம்.

| | |
|---|---|
| காலை | 10-20 |
| மாலை (மெயில்) | 4-25 |
| இரவு | 8-13 |
| ஷை (எக்ஸ்பிரஸ்) | 12-34 |

காரைக்குடியிலிருந்து மானாமதுரைப் பக்கம் செல்லும் வண்டி புறப்படும் நேரம்.

| | |
|---|---|
| காலை | 5-34 |
| ஷை (மெயில்) | 10-16 |
| மாலை | 5-00 |
| இரவு (எக்ஸ்பிரஸ்) | 12-40 |

—





## 'ஜஸ்டிஸ்' பத்திரிகை.

14-வது வருடக் கொண்டாட்டம்.

சென்னை, பிப், 27—

'ஜஸ்டிஸ்' பத்திரிகையின் 14-வது வருடக் கொண்டாட்டம் நேற்று தியாகராய ஞாபக கட்டிடத்தில் நடைபெற்றது. அவ்வமயம் பல விடங்களிலிருந்தும் அநேக பிராமணரல்லாத பிரமுகர்கள் வந்திருந்தனர். இந்தக் கூட்டத்திற்கு கனம் முதன் மந்திரியும் 'ஜஸ்டிஸ்' கட்சித்தலைவருமான திவான்பஹதூர் பி. முனிசுவாமி நாயுடு அவர்கள் தலைமை வகித்தார்கள். கனம் தலைவரவர்கள் கூறியதாவது:—

நாம் இப்பதினான்காம் ஆண்டு தினவிழாவன்று சந்தோஷமடையாமலிருக்கமுடியாது. பதினான்கு வருஷங்களுக்கு முன்னர் இப்பத்திரிகை டாக்டர் T. M. நாயர் அவர்கள், சர் P. தியாகராய செட்டியார் அவர்கள் ஆதரவில் ஆரம்பிக்கப்பட்டது. இப்பத்திரிகையின் ஆரம்பம் இந்திய அரசியல் சரித்திரத்தில் மாறுதல் அடைந்த கால நிர்ணயத்தைக் குறிக்கிறது. தென் இந்தியாவில் பிற்போக்கடைந்து தங்கள் உரிமையை இழந்து இருளில் ஆழ்ந்து கிடந்த பிராமணரல்லாதாரை விழிக்கும்படி செய்துள்ளது. இப்பத்திரிகையை ஆரம்பித்து நடாத்தி வந்தவர்களுக்கும் தற்சமயம் நடத்தி வருபவர்களுக்கும் என்றும் மறவாத நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆரம்பத்தில் எவ்வளவோ இடையூறுகள் ஏற்பட்ட போதிலும் பயமின்றி ஊக்கத்துடனும், பாரபட்சமில்லாலும் பெயருக்கேற்ப நியாயம் எல்லாக்கட்சியார்க்கும் கிடைக்கும்படியும் தொண்டு செய்து வருவது போற்றத்தக்கதாகும். பிராமணரல்லாதார்கள் அனைவரும் இப்பத்திரிகையை ஆதரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அப்பால் இப்பத்திரிகை இதுவரை செய்துள்ள வேலைகளைப் பற்றியும், இனி வருங்காலத்தில் அது ஆற்ற வேண்டிய தொண்டைப்பற்றியும் திருவாளர்களான சர். பாத்ரோ, வி. சக்கரைச் செட்டியார், சர். வேங்கடரத்னம், திவான்பகதூர் ஏ. இராமசாமி முதலியார், ஸ்ரீமதி அலர்மேலு மங்கைத்தாயாரம்மாள் ஆகியவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

—

### தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்.

தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் சென்னை நகரக் கிளையின் பொதுக்கூட்டம் மார்ச்சமீ 1-தேதி நடைபெற்றது. திரு. டி வரதராஜலு தலைமைவகித்தார். திரு. பி. டி. குமாரசாமி செட்டியாரவர்கள் தலைவராகவும், திருவாளர்களான அ. மு. மு. முருகப்ப செட்டியார், ஜி. நாராயணசாமி செட்டியார், ஏ. இராமசாமி முதலியார், டி. வரதராஜலு நாயுடு, வி. நடேச முதலியார், டி. பவானந்தம் குப்தா, வி. தீனதயாளு முதலியார், எம். வி. மதுரைப்பிள்ளை ஆகியவர்கள் உபதலைவர்களாகவும், திருவாளர்களான பிஞ்பல சுப்பிரமணியன் செட்டியார், செட்டிநாட்டுக் குமாரராஜா, கே. ரங்கய்யநாயுடு ஆகியவர்கள் காரியதரிசிகளாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

—

### ரயில் போக்குவரத்து ஒரு திருத்தம்.

இவ்வாரம் ஆறாம் பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கும் ரயில்வே கால அட்டவணையில் காரைக்குடி யிலிருந்து மானாமதுரைப் பக்கம் செல்லும் வண்டிகள் புறப்படும் நேரம் சில பிரதிகளில் பிழையாக அச்சிடப்பட்டு விட்டன. அவைகளின் சரியான நேரம் வருமாறு:—

| | |
|---|---|
| காலை | 5-34 |
| ஷை (மெயில்) | 10-16 |
| மாலை | 5-00 |
| இரவு (எக்ஸ்பிரஸ்) | 12-40 |

## மலாய் நாட்டில் "ஊழியன்" ஆசிரியர்.

காரைக்குடி "ஊழியன்" பத்திரிகையின் ஆசிரியர் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் தைப் பூசத்திற்கு முன் பினாங்குக்கு வந்து சேர்ந்தார்கள். பினாங்கில் நண்பர்கள் நன்கு உபசரித்தனர். தண்ணீர் மலையில் தைப்பூச விழாவின்போது உபந்யாசம் புரிந்தார். கோலப்பிறை, அலோர்ஸ்டார், சுங்கைப்பட்டாணி, கூலிம் முதலிய ஊர்கட்குச் சென்று திரும்பினார். நண்பர் சிலரும் உடன் சென்றனர். பெரும்பாலாக உபந்யாசத்தில் சமூக சீர்திருத்த விஷயமே பேசப்படுகிறது. விதவா விவாகம், கலப்பு விவாகம், வயது வந்தபின் விவாகம் செய்தல், தீண்டாமை விலக்கு, இலக்கிய வளர்ச்சி முதலிய விஷயங்களைப் பற்றித்தான் பிரசங்கம் புரிந்துவருகிறார். இன்னும் பலவூர்கட்கும் சென்று தாய் நாடு செல்வாரென்று தெரிகிறது என ஒரு நிருபர் எழுதுகிறார்.

—

### திவான்பகதூர் முருகப்பசெட்டியார் குமாரருக்கு விருந்து.

சென்னை மார்ச் 3—

வாஷிங்டனில் நடைபெறப் போகும் சர்வ தேசவர்த்தக சங்கத்தின் கூட்டத்திற்கு பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத்தின் பிரதிநிதியாகச் செல்லும் திவான்பகதூர் அ. மு. மு. முருகப்ப செட்டியாரவர்கள் குமாரர் திருவாளர் முருகப்ப செட்டியாரவர்களுக்கு நேற்றிரவு போனொட்டோ ஹோட்டலில் செட்டி நாட்டு குமார ராஜா ஒரு விருந்து நடத்தினர். பிரபலஸ்தர்களாக 60 பேர்களுக்கு மேல் வந்திருந்தனர். குமார ராஜாவும், ஸர். பி. பாத்ரோவும் திரு. முருகப்ப செட்டியாரைப் பாராட்டிப் பேசினர். வாஷிங்டன் மகாநாடு முடிந்தவுடன் திரு. செட்டியார் ஐரோப்பாவில்சுற்றுப்பிரயாணம் செய்வார். நாளை இரவு போட்மெயில் புறப்படுகிறார்.

## நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள்.

திருத்தப்பட்ட ஸ்தல ஸ்தாபன சட்டமும் முனிசிபல் சட்டமும் அமுலுக்குவந்தது முதல் ஆதரவு தங்களேயாகின்றன. அதற்குள்ளாக பல போர்டுகளில் தலைவர்மீதும், உபதலைவர் மீதும் நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள் வந்து தலைவர் உபதலைவர் பதவிகள் ராஜி நாமாச் செய்யப்பட்டிருக்கின்றன. தென்னாற்காடு ஜில்லா போர்டு, இராமநாதபுரம் ஜில்லா போர்டு, கள்ளிக்கோட்டை தாலுகா போர்டு கும்பகோணம் தாலுகா போர்டு, மாயவரம் தாலுகா போர்டு தலைவர் ஸ்தானங்கள் காலி செய்யப்பட்டன. நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்பட்டதன் பேரில் மதுரை முனிசிபல் தலைவர் ராஜிநாமாச் செய்தவுடன் புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் மீதும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்பட்டு அதை அனுமதிக்க முடியாதென்று மறுக்கப்பட்டிருக்கிறது. ஷை முனிசிபல் உபதலைவர் மீது கொண்டுவரப்பட்டு அவர் தமது பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார். எல்லூர் தாலுகா போர்டு தலைவர் மீதும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. நச்சகல்லூர் பஞ்சாயத்துத் தலைவர் மீது நம்பிக்கையில்லாத்தீர்மானம் கொண்டுவரப் போவதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. திண்டுக்கல் முனிசிபல் தலைவரும் தமது பதவியைவிட்டு விலகிவிட்டார். பழநீ தாலுகா போர்டு தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. கோட்டையூர் பஞ்சாயத்துத் தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்பட்டு அனுமதிக்க முடியாதென்று மறுக்கப்பட்டிருக்கிறது. இராமநாதபுரம் தாலுகா போர்டு தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. இராமநாதபுரம் ஜில்லா போர்டு உபதலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. செங்கல்லைத் தாலுகா போர்டிலும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப் பட்டிருக்கிறது.

—



## இந்தியா கவர்ன்மெண்டின் வரவுசெலவு திட்டம்.

ராணுவச் செலவு 52½ கோடி ரூபாய். இந்த வருஷத்திய செலவைக் காட்டிலும் 170 லட்சம் குறைவு.

கடத்தல் வரிகளும் வருமான வரியும் உயர்த்தப்படும். வெள்ளியின் மேல் கடத்தல் வரி அவுன்ஸுக்கு 4 அணாவிலிருந்து 6 அணாவாக உயர்த்தப்படும்.

எல்லாவகைச் சர்க்கரைக்கும் அந்தர் வெயிட்டிற்கு ரூ 1-4-0வீதம் அதிகப்படும்.

வருமானவரி இரண்டாயிரம் ரூபாயிலிருந்து 5000 ரூபாய் வரையில் ரூபாய்க்கு 4 தம்படி வீதம் உயர்த்தப்படும்.

40 ஆயிரம் ரூபாய் வரையில் 5 தம்படி வீதம் உயர்த்தப்படும்.

புது வரிகளால் 14 கோடியே 82 லட்சம் ரூபாய் கிடைக்கும்.

இப்பொழுதுள்ள வரிகளின்படி 13 கோடியே 16 லட்சம் ரூபாய் செலவுக்குப் போதாமல் துண்டுவிழும். அதற்கு ஈடுசெய்யவே 14 கோடி சொச்சம் கிடைக்கும்படி புதுவரிகள் போட உத்தேசம்.

—

### ஸ்தல ஸ்தாபனங்களில் ஒதுக்கப்பட்ட ஸ்தானங்கள்.

| | |
|---|---|
| தஞ்சை ஜில்லா போர்டு | 52-ல் 10 |
| குன்னூர் ஷை | 24-ல் 6 |
| தாராபுரம் முனிஸிபாலிடி | 16-ல் 4 |
| மாயவரம் தாலுகாபோர்டு | 24-ல் 4 |

—

### தேவஸ்தானக் கமிட்டித்தலைவர்

மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் தேவஸ்தானக் கமிட்டிக்கூட்டமொன்றில், ஸ்ரீ. பி. ரங்கசாமி நாயுடுவைத் தலைவராகவும் ஸ்ரீ. ஏ. மீனாட்சி சுந்தரம் அய்யரை உப தலைவராகவும் தெரிந்தெடுத்தனர்.

—

### ஆத்தங்குடி.

அனுதாபக்கூட்டம்:—நமது மாபெருந் தலைவர்களான பண்டித மோதிலால் நேரு மௌலானா முகம்மதலி ஆகியோர் காலமானதற்காக 11-2-31 புதன்கிழமை அன்று ஊர்த்தால் அநுஷ்டிக்கப்பட்டது. ஆத்தங்குடி ஷை முத்துப்பட்டினம் மளிகை, ஜவுளி, பெட்ரோல் முதலான எல்லாக்கடைகளும் காபிஹோட்டல்களும் கலாசாலைகளும் மூடப்பட்டன. பகல் 11மணிக்கு ஓர் பொதுக்கூட்டம் காசி சுவாமிகள் தலைமையில் நிகழ்ந்தது. அவ்வமயம் வெளியூர்களிலிருந்து பல தனவணிகர்களும் வந்திருந்தனர். மகிந்தர்களும் முஸ்லீம்களும் கூடியிருந்தனர். பல அன்பர்கள், பெருந்தியாகிகளான மோதிலால்ஜி மௌலானா முகம்மதலியினுடைய சரித்திரங்களையும் குணநலன்களையும் எடுத்துக்கூறிய பின்னர் கூட்டத்தின் சார்பாக ஸ்ரீமான் T. P. ஜெகநாதய்யர் அனுதாப தீர்மானங்களைப் பிரேரேபிக்க ஸ்ரீமான் ராம. அழ. இராமனுஞ் செட்டியார் ஆமோதிக்க கூட்டத்தினர் எல்லோரும் எழுந்து நின்று ஏகமனதாய் நிறைவேற்றினார்கள். தலைவர் முடிவுரையுடன் கூட்டம் கலைந்தது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

—

### இராமநாதபுரம் ஜில்லா, ஆதித்திராவிட இளைஞர் ஐக்கிய சங்கம்.

கொழும்பிலுள்ள இச்சங்கத்தின் விசேஷக்கூட்டம் கருவைக்காடு முனிசிபல் லெப்பில் கூடியது. திரு. பி. எஸ். ஷண்முகநாதன் அவர்கள் தலைமை வகித்தார். பண்டித மோதிலால் நேரு பரிவடைந்ததற்கு அநுதாப தீர்மானம் செய்யப்பட்டது. எழை பங்காளனான திரு. சௌந்திரபாண்டிய நாடார் ஜில்லா போர்டு பதவியை ராஜிநாமா செய்ததற்கு வருந்துவதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இராமநாதபுரம் சேதுபதி மன்னர் ஜில்லா போர்டு பிரஸிடெண்டாக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்கு மகிழ்ச்சியடைவதாகவும் தாழ்த்தப்பட்ட மக்களின் கஷ்ட நிலைமையை அறிந்து பிரஸிடெண்டவர்கள் உதவிபுரிய வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின. திருமதி மரகதவல்லி அம்மா அவர்களை ஜில்லாபோர்டு அங்கத்தினராக நியமித்தமைக்கு மகிழ்ச்சியடைவதுடன் அரசாங்கத்தாருக்கு நன்றி செலுத்துவதாக ஒருதீர்மானம் நிறைவேறியது. ஒரு நிருபர்.

## அடுத்த வாரம்.

ஆபீஸில் சில வசதிகள் ஏற்படுத்துவதன் பொருட்டு வேலைகள் நடப்பதால் அடுத்த வாரப்பத்திரிகை நிறுத்தப்படும். பங்குனி 6உ இதழ் 24 பக்கங்களுடன் வெளிவரும். பள்ளிக்கூட மாணவர்கள், பெண்கள், ஆதித்திராவிடர் முதலிய தாழ்த்தப்பட்டவர்கள் ஆகியவர்களுக்கு வருஷ சந்தா மூன்று ரூபாயாக அனுமதிக்கப்படும்.

மானேஜர்,
குமரன், காரைக்குடி.

---

# குமரன்

காரைக்குடி.
பிரமோதூதஞு மாசி-மீ உ௨-உ

## ராஜி.

சட்ட மறுப்பியக்கம் தோன்றியதிலிருந்து தலைவர்களும் தொண்டர்களும் அதிகமான அடக்கு முறைகட்கு உட்பட வேண்டியவர்களானார்கள். அரசாங்கத்தாரும் பல வகையான அடக்குமுறைகளைக் கையாண்டனர். வட்டமேசை மகாநாட்டில் தேசியத் தலைவர்கள் அங்கம் பெறுமை அம்மகாநாட்டுக்குப் பெருமதிப்பு நல்க முடியாது போயிற்று. என்றாலும் இன்று சமாசமான ராஜியேற்பட்டிருப்பது இந்திய மக்களுக்கு மகிழ்ச்சி யளிப்பதாகும். சட்டமறுப்பியக்கத்தால் நாட்டில் பலவிதமான கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டுவிட்டன. மகாத்மாவுடன் லார்டு இர்வின் ராஜி பேச முன்வந்தது முதல் பொதுஜனங்களுடைய உள்ளமும் வெளிநாட்டு மக்களுடைய உள்ளமும் டெல்லியை நோக்கிய வண்ணம் செய்தியை யெதிர்நோக்கி நின்றன. என்றாலும் விஷயங்கள் முற்றும் அந்தரங்கமாகவே நடைபெறுவதாயின. இடையில் ராஜி முயற்சி முறிந்து போகுமோ என்ற சந்தேகமும் பலருக்கெழுந்தது. என்றாலும் முடிவாக ஒரு நல்ல ராஜி யேற்பட்டிருக்கிறதென்ற செய்தி கிடைத்திருப்பதில் பொது ஜனங்கள் திருப்தி கொள்ளலாம்.

கடற்கரையி லுள்ளவர்கள் உப்பு செய்யவும் விற்கவும் அனுமதிக்கப்படுவார்களென்பது உப்பு சத்தியாக்கிரகத்தின் ஞாபகார்த்தமாக இருக்கும். ஏழை மக்கட்கு உப்புவிலை மலிவால் சாதகமும் ஏற்படக் கூடும். பலாத்காரக் குற்றஞ்செய்யாத ராஜீயச் சிறையாளர்கள் விடப்படுவார்கள். ஏலத்தில் விடப்பட்ட சொத்துக்களும் பறிமுதலான சொத்துக்களும் திருப்பிக் கொடுக்கப்படும். போலீசார் செய்த அக்கிரமங்களைப்பற்றி விசாரிப்பதில்லையென்ற விஷயங்கள் ஒன்றுக் கொன்று விட்டுக்கொடுப்பனவாகவே முடிந்திருக்கின்றன.

சீமை ஜவுளிமறியலும் சாராய விற்பனை மறியலும் நடக்க அனுமதியளிக்கப்படும் என்ற ஒப்பந்தம் குறிப்பிடத்தக்கதாகும். காங்கிரஸ் காரர்களின் சட்ட மறுப்பியக்கத்திற்பட்ட கஷ்டங்களுக்கு இது குறிப்பிடத்தகுந்தபயனாகும். இதனால் நாட்டிற்குப் பெருத்த நலனை யெதிர்பார்க்கலாம். இதற்கெனச் சில திட்டங்களைப்பற்றிப் பெரிய வியாபாரிகள் சிலருடன் கலந்து பேசியிருப்பதாகத் தெரிகிறது. புதிய சாக்கு ஒப்பந்தம் செய்வதில்லையென்றும், பழயசாக்கு வைத்திருப்பவரிடமிருந்து வாங்கி அயல் நாடுகட்கு அனுப்பிவிடுவதென்றும் ஒரு முடிவுக்கு வந்திருப்பதாகச் செய்தி கிடைக்கிறது. இவ்வாறன வேலை, திறமையோடு செய்யப்படுமானால் இந்தியத் துணி வியாபாரம் வளரக்கூடும். சாராயக்கடைமறியல் சட்டபூர்வமாக அனுமதிக்கப்படுமானால் ஏழைமக்கட்குப் பணமிச்சம் ஏற்படக்கூடும். ராஜி முயற்சி பலன் பெற்றதால் தேசிய நலத்திற்கான ஆக்க வேலைகளில் முனைந்து வேலை செய்வதில் தலைவர்களும் ஊக்கமாக முன்வர வழியேற்பட் டிருப்பது பெருத்தலாபகரமான தாகும்.

சட்ட மறுப்பியக்கத்தின் ஆரம்ப காலத்திலிருந்தே திருவாளர்களான ஜெயகர், சாப்ரு ஆகிய இருவரும் அரும்பாடுபட்டிருக்கின்றன ரென்பதும் முடிவில் வெற்றி பெற்றார்களென்பதும் என்றும் மறக்க முடியாதனவாகும். இந்த ராஜியின் பயனாக வழங்கப்போகும் அரசியல் திட்டம் பயனுடையதாகக்கூடும். காங்கிரஸ் காரரின் போராட்டமும் அதிகாரவர்க்கத்தின் அடக்கு முறையும் அமுலிலிருக்கும் போது ஒரு அரசியல் திட்டம் வழங்குவது சுலபமானதன்று. தற்போதைய ராஜியால் வரப்போகும் அரசியல் திட்டம் ஒளிபெறக்கூடு மென்பதிலையமில்லை.

---

## உள்ளூர்ச் செய்தி

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0—2—0 |
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | 0—10—0 |
| பவுன் விலை | 13—10—0 |
| வெள்ளி விலை | 44—0—0 |

தபால் வசதி:—மானாமதுரை, சிவகெங்கை, சிலோன், திருவனந்தபுரம், தேவகோட்டை, திருப்பத்தூர் முதலிய ஊர்களுக்கு காலை 9 மணிக்கு தபால்கள் எடுக்கப்படும் என்றும், தேவகோட்டை, திருப்பத்தூர் தவிர இந்தியாவிலுள்ள எல்லா ஊர்களுக்கும், அயல்நாடுகளுக்கும் மாலை மூன்று மணிக்கு தபால் எடுக்கப்படும் என்றும், தேவகோட்டை, திருப்பத்தூர், சிலோன் தபால்களும், அங்கிருந்து வரப்பட்ட பார்சல், ரிஜிஸ்டர், மணியார்டர் முதலியவைகளும் காலை 7 மணிக்கு டெலிவரி செய்யப்படும் என்றும், தேவகோட்டை, திருப்பத்தூர் தவிர மற்ற உள்நாடு, வெளிநாட்டுத் தபால்கள் பகல் 12-30 மணிக்கு டெலிவரி செய்யப்படுமென்றும் அறிவிக்கப்படுகிறது.

முனிசிபல் கூட்டம்:—புதிய முனிசிபாலிட்டி ஆக்டின்படி இம் முனிசிபாலிட்டியை வார்டுகளாகப் பிரிப்பதைப்பற்றியும், அது சம்பந்தமான பேப்பர்களைப்பற்றியும் யோசிப்பதற்காக மார்ச்சு மாசம் 6-தேதி வெள்ளிக்கிழமை மாலை 4 மணிக்கு கவுன்ஸிலின் அவசர ஸ்பேஷல் கூட்டமொன்று நடைபெறுமென அறிவிக்கப்படுகிறது.

---

## தந்திச் செய்தி.

பினாங்கு, மாசி 21உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | 155 |
| ஈயம் விலை | 62 |
| ரப்பர் விலை | 16 |

---

## செட்டிமார் நாட்டு முதலாவது
# சுயமரியாதை மகாநாடு
### வரவேற்புக் கழக அமைப்புக்கூட்டம்

செட்டிமார் நாட்டு முதலாவது சுயமரியாதை மகாநாட்டு வரவேற்புக் கழக அமைப்புக்கூட்டம் 9—3—31 திங்கட்கிழமை மாலை 5-மணிக்கு காரைக்குடி குமரனுபீஸில் ஒரு கூட்டம் நடைபெறும். இயக்கத்தில் அபிமானமுள்ள அன்பர்கள் அனைவரும் விஜயம் செய்யுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

அன்புள்ள,
ராமசுப்பிரமணியம்.

---

## 3 வது மாகாண
# சுயமரியாதை மகாநாடு.
### வரவேற்புக் கழக அமைப்புக்கூட்டம்.

மேற்படி வரவேற்புக்கழக அமைப்புக்கூட்டமானது 3—3—31 செவ்வாய்க்கிழமை கூடுவதாக அறிவிக்கப் பட்டிருந்தது. ஆனல் சில அசந்தர்ப்பங்களினல் மேற்படிகூட்டம் ஒத்திவைக்கப்பட்டு 6-3-31 வெள்ளிக்கிழமை மாலை 6-மணிக்கு முன் அறிவித்தபடி விருதுநகர் நாடார் பரிபாலன சங்கக் கட்டிடத்தில் நடைபெறும். அன்பர்கள் அவசியம் வந்து சேரும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

அன்புள்ள,
விருதுநகர் 27—2—31 } W. P. A. சௌந்தர பாண்டியன்.

---

காரைக்குடி
## முனிசிபல் எல்லைக்குள் பேசக்கூடாது.

### மூவருக்கு 144 தடையுத்தரவு.

குமரன் ஆசிரியர் எஸ். முருகப்பா, சண்டமாருதம் ஆசிரியர் பொன்னம்பலம், குமரனுபீஸ் ஜீவநாதன் ஆகிய நீங்கள் முனிஸிப்பாலிட்டிக்கு எதிராக வரிகொடா இயக்கமொன்று ஆரம்பித்து கூட்டங்கள் கூட்டியும் ஜனங்களிடம் முனிசிப்பல் வரி கொடுக்கவேண்டாமென்று தூண்டிப் பிரசங்கங்கள் நிகழ்த்தியும் வருவதாக காரைக்குடிப் போலீசாரிடமிருந்து தகவல் கிடைத்திருப்பதாலும், இத்தகைய இயக்கம் பொதுஜன அமைதியைக் கெடுத்துக் குழப்பம் விளைவிக்குமென்று எண்ணப்படுவதாலும் கி. பி. கோ. 144-வது வகுப்பின்படி காரைக்குடி முனிசிப்பல் எல்லைக்குள் கூட்டம் கூட்டவோ, பிரசங்கங்கள் புரியவோ அல்லது அவ்விஷயத்திற்காக எதுவும் செய்யவோ கூடாதென்று நான் தடைசெய்கிறேன்.

நோட்டீஸ் சார்வு செய்வதற்குப் போதிய சமயம் இல்லாததால் இந்த உத்தரவு எக்ஸ்பார்ட்டியாக விடுக்கப்படுகிறது.

இவ்வுத்தரவு திருப்பத்தூர் 2-வது வகுப்பு மாஜிஸ்திரேட்டால் பிறப்பிக்கப்பட்டு திரு. சொ. முருகப்பா, திரு. அ. பொன்னம்பலம் ஆகிய இருவர்கட்கும் காரைக்குடி போலீசாரால் 28-2-31-ல் சார்வு செய்யப்பெற்றது.

---

### புதுக்கோட்டை திவான் மாற்றம்.

புதுக்கோட்டை திவானாக இருந்த திரு. கணபதி சாஸ்திரிகள் தமது பதவியை விட்டு விலகிவிட்டார். திரு. E. K. கோவிந்தன் அவர்கள் திவானாக நியமிக்கப்பட்டு மார்ச்சு மீ 4 உ சார்ஜ் ஒப்புக்கொண்டார்.

---

## "சண்டமாருதம்"

நமது பத்திரிகை அச்சிடப்படும் குமரன் பவர் பிரஸ் கட்டிடவேலைகள் நடப்பதால் 9-3-31ல் நமது பத்திரிகை வெளிவராது. 16-3-31ல் வழக்கம்போல் வெளிவரும் என்று மானேஜர் அறிவிக்கிறார்.

---

### நிருப நேயர்கட்கு அறிவிப்பு.

குமரன் வாரப்பதிப்பு அடுத்த இதழிலிருந்து பக்கங்கள் அதிகமாக்கப்படுவதால் செய்திகள் ஏராளமாக வெளியிடப்படும். செட்டிமார்நாட்டிலுள்ள அன்பர்கள் ஆங்காங்குள்ள நிகழ்ச்சிகளை யெழுதியனுப்பலாம்.

1. கூடியவரை சுருக்கமாக எழுதப்படவேண்டும்.

2. பொய்யான செய்திகளையாவது, ஆட்களை அனாவசியமாகத் தாக்கி எழுதியாவது, பொது ஜன நன்மைக்கு சம்பந்தப்படாத செய்திகளையாவது அனுப்பக்கூடாது.

ஆசிரியர், குமரன், காரைக்குடி.

---

### நாட்டுக்கோட்டையாரில் ஆகாய விமானி.

காரைக்குடி திருவாளர் வெ. ராம. ஆ. ஆவுடையப்ப செட்டியார் அவர்கள் ஆகாய விமானம் ஓட்டுவதற்கு "ஏ" வகுப்பு (Pilot Certificate) சர்டிபிகேட் பெற்றிருக்கிறார்கள். "பிளாக்பேர்ன் புளூபோர்டு" என்னும் ஆகாய விமானம் ஒன்றையும் வாங்கியிருக்கிறார்கள். அதன் மூலம் இந்தியாவிலும், பின்னர் அயல் நாடுகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்வார்களெனத் தெரிகிறது. இவர்களுக்கு வயது இப்பொழுது இருபதேயாகும்.

---



# ராஜி யேற்பட்டது.

## முயற்சி வெற்றியளித்தது.

### காந்தி—இர்வின் பெருந்தன்மை.

புதிய டில்லி, மார்ச் 4—

இராஜப்பிரதிநிதியை மகாத்மா இன்று பகல் 12-மணிக்குச் சந்தித்தார். ஒப்பந்தம் ஊர்ஜிதப்பட்டுவிட்டது.

புதிய டில்லி மார்ச் 4—

மார்ச் 3-ந்தேதி இந்தியாவின் சரித்திரத்திலேயேபெரிய சுபதினமாகும்; அதுவெற்றி நாளுமாகும். சென்ற வருஷம் மார்ச்சு மாதம் 30-ந்தேதியன்று பிற்பகலில்தான் மகாத்மாவின் 11 கோரிக்கைகளுடன் கூடிய கடிதம் ஒரு தூதரால் இராஜப் பிரதிநிதியிடம் சேர்க்கப்பட்டது.

அக்கடிதம் பட்டுவாடாச் செய்யப்பட்டுச் சரியாக 365 நாட்கள் (ஒரு வருஷம்) ஆகியதும் ராஜப் பிரதிநிதி மாளிகைக்குள் மகாத்மாஜீ ராஜப் பிரதிநிதியுடன் போராட்ட நிறுத்த உடன்பாட்டைச் செய்து கொள்ள நுழைந்தார். அவர் ராஜப் பிரதிநிதி மாளிகைக்குள் நுழைவதில் இது 8-வது முறையாகும். அவர் ராஜப் பிரதிநிதியுடன் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தார். இந்த சம்பாஷணையால் யாவராலும் விரும்பப்பட்ட உடன்பாடு ஏற்பட்டது. இது பலருக்கு கஷ்ட நிவாரணத்தையும் சந்தோஷத்தையு மளிக்கும்.

இதன் பயனாகச் சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தப்படும். அடக்கு முறைகளும் அவசரச் சட்டங்களும் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்படும். இதன் மூலம் சமாதானம் ஏற்படுத்தப்படும். பிப்ரவரி மாதம் 17-ந்தேதி செவ்வாய்க்கிழமை யன்று காந்திஜீ லார்டு இர்வினுடன் நேராக ராஜிப்பேச்சு ஆரம்பித்தார். 15 தினங்களுக்கெல்லாம் "நன்றாக ஆரம்பித்த ராஜிப்பேச்சு" வெற்றிகரமாக முடிவடைந்தது. இச்செவ்வாய்க்கிழமை யன்றும் வரவு செலவு மெம்பர் ஸர் ஜார்ஜ் ஷுஸ்டரும் மகாத்மாஜீயும் கலந்து பேசினர். இதனால் நல்ல ஆரம்பமேற்பட்டிருக்கிறது. உப்பு விஷயமாக ஸர் ஜார்ஜ் ஷுஸ்டரின் ராஜதந்திரத்தால் திருப்திகரமான உடன்பாடு ஏற்பட்டது. ஸர் ஜார்ஜ் ஷுஸ்டர் கடற்கரை யோரத்திலுள்ள எளிய ஜனங்கள் எப்பொழுதாவது உப்பைப் பொறுக்கி விற்பதைக் கவனிக்காமல் விட்டுவிடச் சம்மதித்தார், பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்களைத் திருப்பிக் கொடுத்துவிடுவது சம்பந்தமாகவுள்ள ஒரு விஷயம் நீக்கலாகவுள்ள மற்ற விஷயங்களைப்பற்றிப் போராட்ட நிறுத்த நிபந்தனைகள் நிர்ணயமாகிவிட்டதால் இது பிற்பகலில் ராஜப்பிரதிநிதியைக் காந்திஜீ கண்டு பேசியபொழுது ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. மகாத்மாஜீ வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தார். டிப்டி காரியதரிசி மிஸ்டர் எமர்ஸனும் பிரசன்னமாக இருந்தார்.

மகாத்மாவுக்குசிஷ்ருஷை செய்வதில்மிக்க உஷாராக இருக்கும் அவரதுசிஷ்யையான ஸ்ரீமதி மீராபென் என்ற மிஸ்ஸ்லேடு பிரிட்டிஷ் கப்பற்படைத் தலைவரின் ஒரே குமாரத்தியாவார். மிஸ்ஸ்லேடு ஜெயின சந்நியாசினியைப்போன்ற முரட்டுக்கதராடை உடுத்திக் காலில் எதுவும் அணியாமல் மகாத்மாவின் உணவான தயிரும் ஜலத்தில் ஊறவைக்கப்பட்டிருந்த பேரீச்சம்பழமுமிருந்த மூங்கில் கூடையைக் கையில் எடுத்துக்கொண்டு பாபுவுக்கு (தக்கை என்ற அர்த்தம். மகாத்மாவை சபர்மதி ஆச்சிரமவாசிகள் இவ்வாறுதான் கூப்பிடுவது வழக்கம்) அவரது மாலை போஜனத்தைப் பரிமாற இராஜப் பிரதிநிதியின் மாளிகைக்குள் சென்றார். இராஜப்பிரதிநிதியின் மாளிகைக்குள் காலில் எதுவும் அணியாமல் நுழைந்த முதல் ஆங்கிலேய ஸ்திரீ இவர்தான். வெயிலால் வாடிப்போன ஆங்கிலேய மாதான ஸ்ரீமதி மீராபென் (மிஸ் ஸ்லேடு) மூங்கில் கூடையுடன் தாங்களிருந்த அறைக்குள் வந்ததைக் கண்டு இராஜப்பிரதிநிதிக்கும் மிஸ்டர் எமர்ஸனுக்கும் மிக்க மனமிளகிவிட்டது. அவர்கள் தங்களது ஆசனங்களிலிருந்து எழுந்து சமாதானத் தூதரைப் போன்று விளங்கிய மிஸ் ஸ்லேடுடன் கைகுலுக்கி அவரை மிக்க அன்புடன் வரவேற்றனர். 5-55-க்கு மிஸ் ஸ்லேடு பாபுவின் உணவைப் பரிமாற ஆரம்பித்தார். இராஜப்பிரதிநிதியின் படிப்பறையில் மகாத்மா காந்தி எர்வாடா சிறைக்கூட அதிகாரிகள் தமக்கு எடுத்துச் செல்ல அனுமதிகொடுத்த தத்தகரத் தட்டிலிருந்தும் தத்தகரக் குவளையிலிருந்தும் முறையே பேரீச்சம் பழங்களை எடுத்துத் தின்றும் தயிரைப் பருகிக் கொண்டு மிருந்தார். போஜனம் வைத்து கொள்ளுவதற்கான மேஜை அங்கில்லை. போஜன உடை என்ற தனி உடைஎதுவுமணியவில்லை. ராஜப்பிரதிநிதி எதிரில் உட்கார்ந்து கொண்டிருந்தார். மிஸ்டர் எமர்ஸன் ஒரு புறத்திலும் மற்றொரு புறத்தில் கதராடை தரித்த ஆங்கிலேய ஸ்திரீயான மிஸ் ஸ்லேடும் உட்கார்ந்து கொண்டிருந்தனர். மகாத்மாஜீ இடதுகையில் தத்தகரக் குவளையை வைத்துக் கொண்டும் வாயில் பேரீச்சம்பழத்தைப் போட்டு அரைத்துக் கொண்டும் பேசிக் கொண்டே இருந்தார். 6-45 மணிக்கு காந்திஜீ டாக்டர் அன்சாரியின் பங்களாவுக்குத் திரும்பிவந்தார். இராஜப்பிரதிநிதி சாப்பிட்டுவிட்டுத் தயாராவதற்குள் காரியக் கமிட்டியைச் சிறிது நேரம் கலந்து ஆலோசித்து விட்டுத் திரும்பிவந்துவிட்டார். லார்டு இர்வினும் மகாத்மாஜீயும் இரவு 9-மணிக்குச் சம்பாஷணையைத் துவக்கினார்கள். 1-30 மணிவரை சம்பாஷணை நீடித்து நடந்தது. பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்களைத் திருப்பிக்கொடுக்கும் விஷயமாக ராஜி ஏற்படவில்லை. ஏலத்தில் தனிப்பட்ட நபர்களுக்கு விற்கப்பட்டவை உட்படவுள்ள எல்லா நிலங்களையும் அவற்றின் சொந்தக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்க முடியாதெனக் கவர்ன்மெண்டார் வாதித்தால் ராஜிப்பேச்சை நிறுத்திவிடும்படி மகாத்மாவுக்குக் காரியக் கமிட்டி ஆணையிட்டது. இரவு 12 மணிக்கே இறுதியான முடிவுகள் ஏற்பட்டன. அப்பொழுது சந்திரன் மேகங்களிலிருந்து வெளிவந்து பிரகாசித்தான். மழையும் நின்றுவிட்டது. சுழல் காற்றும் மறைந்தது. அப்பொழுது லார்டு இர்வின் மகாத்மாஜீயுடம் விடைபெற்றுக் கொண்டார். "நாம் சந்தோஷமாகவும் அமைதியாகவும் தூங்கலாமென நம்புவோமாக" என்று சொல்லி அவர் விடைபெற்றுக் கொண்டார்.

புதிய டில்லி, மார்ச் 4—

மே. த. ராஜப்பிரதிநிதிக்கும் மகாத்மா காந்திக்கும் நேற்று இரவு சாப்பாட்டுக்குப் பின் தொடர்ச்சியாக விவாதம் நடந்து விடியற்காலை 1-30 க்கு பூர்த்தியாயிற்று. காந்திஜீயும், லார்டு இர்வினும் போராட்ட நிறுத்த உடன்பாட்டைச் செய்துகொண்டுவிட்டனர். இருதரப்பாருக்கும் திருப்திகரமான உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது. பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்களைத் திருப்பிக் கொடுப்பது மிக்க தகராறன விஷயமாக இருந்தது. அதிலும் உடன்பாடு ஏற்பட்டுவிட்டது. டாக்டர் அன்சாரியின் பங்களாவில் காரியக்கமிட்டி மெம்பர்களும் சில பத்திரிகாசிருபர்களும் காந்திஜீயின் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். மழையினாலும் பலமான காற்றினாலும் குளிர் அதிகமாக இருந்தது. இரவு 1-மணி யாகியும் மகாத்மாஜீ வராததைக் கண்டு எல்லோரும் மிக்க கவலையுடனிருந்தனர். கடைசியாக 1-30 மணிக்கு மகாத்மாஜீ வந்தார். அவர் வழக்கம்போல் பத்திரிகா நிருபர்களைக் கண்டு "நான் புதன்கிழமை பகல் 12-மணிக்கு ராஜப்பிரதிநிதி மாளிகைக்குத் திரும்பிச் செல்லுவேன்." என்று மாத்திரம் தெரிவித்தார். உடனே காரியக்கமிட்டி கூடியது. காந்திஜீ அதில் போராட்ட நிறுத்த சம்பந்தமாக உடன்பாடு ஏற்பட்டு விட்டதாக அறிவித்தார். காரியக்கமிட்டி இரவு 2-30 மணிக்குக் கலைந்தது. காரியக்கமிட்டி மெம்பர்கள் ஒவ்வொருவரும் போராட்ட நிறுத்தச் செய்தியை மிக்க சந்தோஷத்துடன் ஏற்றனர்.

சமாதான நிபந்தனைகள் பின்வருவனவென்று நம்பத்தகுந்த இடத்திலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது.

சமுத்திரக்கரையிலிருப்பவர்கள்உப்பு சேகரிக்கவும் உப்பு செய்யவும் உப்பு விற்கவும் உரிமை பெறுவார்கள். போலீஸ் அக்கிரமங்களைப்பற்றி காந்திஜீ கவர்ன்மெண்டாரிடம் தெரிவித்தார். பகிரங்க விசாரணை நடத்தினால் இருதரப்பிலும் குறை கூறுவதும் சமாதானம் சொல்வதுமாகவிருக்க நேரிடுமாகையால் இது அரசியல் விஷயங்களைப்பற்றி விவாதிப்பதற்கு சவுகரியமாகவிருக்காது. சமாதானம் ஏற்படலாம். ஆகவே காந்திஜீ இவ்விஷயத்தை வற்புறுத்தவில்லை. பீஹார் முதலிய இடங்களில் ஏற்படுத்தப்பட்ட தண்டப் போலீஸ் எடுபட்டுப் போகும் தண்டவரியும் ரத்து செய்யப்படும். இதுவரைவசூலிக்கப்படாத தண்டவரி வஜா செய்யப்படும். பலாத்கார குற்றஞ் செய்யாத எல்லா ராஜீயச் சிறையாளரும் உடனே விடுதலை செய்யப்படுவார்கள். சாத்வீக சீமை ஜவுளி மறியலும், சாராயக் கடைமறியலும் நடக்க அனுமதிக்கப்படும் பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்களும் ஏலத்தில் விடப்பட்ட சொத்துக்களும் வரி செலுத்த மறுத்தோருக்கு திருப்பிக் கொடுக்கப்படும்.

இன்று பகல் காந்திஜி இராஜப் பிரதிநிதியைக்கண்டு பேசியபின் சமாதான நிபந்தனைகளைப்பற்றிய கவர்ன்மெண்டு அறிக்கை இன்று மாலை வெளியிடப்படும். இந்த அறிக்கையை கவர்ன்மெண்டு உள் நாட்டு இலாகா உதவி காரியதரிசி மிஸ்டர் எமர்சன் தயாரித்து வருகிறார்.

ஸ்ரீமான் பிர்லா தமது வீட்டிலிருந்த விருந்தினர்களான ஸர் புருஷோத்தமதாஸ், பண்டித மாளவியா முதலியவர்களை எழுப்பி இந்தச்சந்தோஷ செய்தியை விடியற்காலையில் அறிவித்தார். இரவு 1-மணிக்கு முடிவேற்பட்டதால் சிலர்தவிர மற்றவர்களுக்கு இவ்விஷயம் தெரியாது. பண்டித மாளவியா உடனே தமது புத்திரர் கோவிந்த மாளவியா விடம் சமாதானம் ஏற்பட்டு விட்டதைப் பற்றி டாக்டர் சாப்ருவுக்கும் ஸ்ரீமான் ஜெயகருக்கும் டெலிபோன் மூலம் அறிவிக்கும்படி கூறினார். டாக்டர் சாப்ரு "இதைக் கேட்க எனக்கு மிக சந்தோஷமாக விருக்கிறது. லார்டு இர்வினையும் காந்திஜியையும் நாட்டினரையும் நான் பாராட்டுகிறேன்" என்றார்.

புதுடில்லி, மார் 4—

இன்று மத்தியானம் 12மணிக்கு மேல் ஒன்றரை மணிக்குள் ராஜப்பிரதிநிதியின் மாளிகையில் ராஜப்பிரதிநிதிக்கும் மகாத்மா காந்திக்கு மேற்பட்ட உடன்பாட்டில் இருவரும் கை எழுத்து செய்வார்கள். தென் ஆபிரிக்காவில் 16 வருஷங்களுக்கு முன் ஜெனரல் ஸ்மட்ஸுக்கும் மகாத்மாவுக்கு மேற்பட்டது போன்ற உடன்படிக்கை இப்பொழுது லார்டு இர்வினுக்கும் மகாத்மாவுக்கும் ஏற்படுகிறது. இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கு முள்ள சம்பந்தத்தைப் பலப்படுத்தப் போகிற இந்த உடன்படிக்கையில் கையெழுத்து போடும்வேலை நடைபெற வெகுநேரமாகாது. உடன்படிக்கைநிபந்தனைகளை அங்கீகரிக்க காங்கிரஸ் காரியக்கமிட்டி 2மணிக்கு டாக்டர் அன்ஸாரி ஜாகையில் கூடுகிறது. சமாதான நிபந்தனைகளை காங்கிரஸ் காரியக் கமிட்டி ஊர்ஜிதம் செய்து உடனே சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்திவிட மற்ற காங்கிரஸ் கமிட்டிகளுக்கு அறிக்கை அனுப்பும்.

மகாத்மா சீக்கிரத்தில் ஆமதாபாத்துக்குப் புறப்படுவார். அவரது அலுவல் முறை இன்னும் திட்டமாகவில்லை. காரியக்கமிட்டி சாத்வீக மறியலுக்கு வியாக்யானம் செய்வதோடு நிபந்தனைகளும் ஏற்படுத்தும்.

---

### மானநஷ்ட வழக்கு.

திரு. செல்லியான் அவர்கள் மீது திரு தி. ம. நடராஜன் அவர்கள் தொடர்ந்திருக்கும் மானநஷ்ட வழக்கு நேற்று மானகிரி முகாமில் விசாரணை நடைபெற்றது. திரு தி. ம. நடராஜன், திரு மாகதவல்லியார், திருவாளர்களான டாக்டர் சுப்பிரமணியம், என். எஸ். வெங்கட்டராமய்யர், ந. ப. ராம. திருநாவுக்கரசு செட்டியார், ஆகியோர் விசாரிக்கப்பட்டனர். மார்ச் மாதம் 13-ந் தேதி வாயிதா ஏற்பட்டிருக்கிறது. திரு தி. ம நடராஜனுக்காக தேவகோட்டை திரு M. R. சேஷய்யரும், திரு குப்புசாமி ஐயரும் ஆஜராயினர். திரு செல்லியானுக்கு சென்னை பாரிஸ்டர் ஜியார்ஜ் ஜோஸப்பும், திரு நப்பனும் ஆஜராகியிருந்தனர்.

ஒரு நிருபர்.

---

## குமரன் டைரிகள்.

### பிரஜோற்பத்தி ஆண்டு.

| | |
|---|---|
| பெரிய டைரி 1-க்கு ரூபா | 1—0—0 |
| ஷை 1-க்குச் செலவு ,, | 0—3—0 |
| ரிஜிஸ்டர்ச் செலவு ,, | 0—2—0 |
| சிறிய டைரி 1-க்கு விலை ரூபா | 0—8—0. |
| ஷை 1-க்குச் செலவு | 0—1—6. |
| எத்தனையானலும் ரிஜிஸ்டர் செலவு | 0—2—0 |

மானேஜர்,
**தனவைசியன் கம்பெனி லிமிடெட்,**
காரைக்குடி.

---

## விளம்பரம்.

காரைக்குடி முத்து.ராம. மு. இராமநாதன் செட்டியார் பிரமோதூத-ஞு மாசி-மீ 20-உ அனுப்பிய லெட்டருக்குச் சரியான நகல்.

காரைக்குடி சு. நா. மைனர் அழகப்ப செட்டியாருக்கு நாயாரும்கார்டியனுமான உண்ணாமலை ஆச்சிக்கு ஷை யூர் முத்து. ரும. மு. ருமநாதன் எழுதியது. தங்கள் மாமனர் லேட் சு. நா. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களுக்கு பிரபவஞு மாசிமீ உ௯உ தவணைக் கடதாசி யெழுதித்தந்து பெற்றுக் கொள்வதாய் ஒரு லெட்டர் எழுதிக் கொடுத்திருக்கிறேன். அதில் கண்டபடி தவணைக் கடதாசி யெழுதிக் கொடுக்கவும் அல்லது வட்டியும் முதலும் சிங்கப்பூரில் கொடுக்கவும் தயாராக இருக்கிறேன். ஆனல் தங்கள் மாமனருடைய இளைய மனைவி சிவகாமி ஆச்சி சு. நா. பணம் இருப்பதை தங்களிடம் கொடுக்கப்படாதென்று எனக்கொரு நோட்டீஸ் தந்திருக்கிறபடியால் என் லெட்டரில் கண்டபடி தவணைக்கடதாசி வேணுமானாலும் அல்லது சிங்கப்பூரில் பணம் வேணுமானாலும் அதற்கு தாங்கள் பொறுப்பான ஜாமீன் லெட்டர் எழுதித் தந்து பெற்றுக் கொள்ளவேண்டியது. தவிர தாங்கள் மேல் நடத்தினல் அதினால் வரும் செலவு முதலானதுகளை தங்களிடம் வசூலிக்கும்படி நேரிடும் என்பதை இதன் மூலம் தெரிவித்திருக்கிறேன்.

முத்து. ரும. மு. ருமநாதன்.
3—3—31

## கராச்சி காங்கிரஸ்

### உபசரணைக் கமிட்டி ஆபீஸ் திறப்பு.

கராச்சி, பிப் 26—

கராச்சி காங்கிரஸ் உபசரணைக் கமிட்டி காரியாலயம் இன்று பந்தர்ரோடில் பிரம்ம ஞான சங்க மண்டபத்துக் கருகில் திறந்து வைக்கப்பட்டது. கமிட்டியின் தந்தி விலாசம் "காங்கிரஸ் கராச்சி" என்பதாகும். காங்கிரஸ் நகர் அமைக்கும் வேலைக்கான பூர்வாங்கமான ஏற்பாடுகள் முடிந்து வருகின்றன. ஜல வசதிக்கான ஏற்பாடும் மின்சார விளக்கு ஸ்தம்பங்கள் நடுவதும் நிலத்தை மட்டப்படுத்துவதும் துரிதமாக நடந்து வருகின்றன. பிரபல விஸிட்டர் கட்டணம் 5000 ரூபாயாகவும், 2500 ரூபாயாகவும், 1500 ரூபாயாகவும், 200 ரூபாயாகவும் 50 ரூபாயாகவும் வைக்கப் பட்டிருக்கிறது. இவர்களுக்கு மேடைமீது ஸ்தானம் அளிக்கப்படும். காங்கிரஸ் பந்தலில் ஒலி பரப்பும் கருவிகள் அமைக்கப்படும். காங்கிரஸ் நடவடிக்கைகளைப் படம் எடுத்து சினிமாவில் காட்ட விரும்புவோர் முன்னதாக மனுசெய்து கொள்ளலாம்.

### காதி பொருட்காட்சி.

கராச்சி பொருட்காட்சிக் கமிட்டிக் காரியதரிசி அறிவிப்பதாவது:—

வேலாரி மஹா மண்டலம் அகில இந்திய நூல் நூற்போர் சங்க ஆதரவுடன் மகாத்மாவைக் கலந்துகொண்டு கராச்சியில் மார்ச்சு மாதம் 15ந்தேதி முதல் காதி பொருட்காட்சி நடத்த முடிவு செய்திருக்கிறது. கதர் வியாபாரிகளுக்குத் தான் இதில் இடம் கொடுக்கப்படும். சுதேசி சாமான் காட்சியொன்றும் தனியாக ஏற்பாடு செய்யப்படும். இதில் நெசவுத் தொழில் சாமான்கள் மட்டும் சேராது. இது சம்பந்தமாக மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன. 281 தபாற்பெட்டி கராச்சி விலாசத்துக்குக் கடிதப் போக்குவரத்து நடத்தப்பட வேண்டும்.

—

### கைதியான சத்தியாக்கிரகிகள்

நமது நாட்டில் அரசியல் சம்பந்தமாகச் சட்டத்தை மீறி, சென்ற டிசம்பர் மாதம் முடிவரை கைதியான சத்தியாகிரகிகள் 54049 விடுதலை பெற்றவர்கள் போக 1931 ஜனவரி முதல் தேதியில் சிறையிலிருப்பவர்கள் 23,504. மாகாண வாரியாகவுள்ள தொகை பின்வருமாறு:—

| மாகாணம் | சிறை புகுந்தவர் | விடுதலை யடைந்தவர் |
|---|---|---|
| வங்காளம் | 11,463 | 2973 |
| சென்னை | 3,998 | 2110 |
| பம்பாய் | 9,732 | 3803 |
| ஐக்கிய மாகாணம் | 7,606 | 4555 |
| பஞ்சாப் | 3,561 | 1349 |
| பீகார், ஒரிசா | 10,399 | 4930 |
| மத்தியமாகாணம் | 3,861 | 2139 |
| அஸாம் | 1,088 | 291 |
| வடமேற்கு எல்லை மாகாணங்கள் | 761 | 337 |
| கூர்க் | 6 | 4 |
| டில்லி | 1,073 | 953 |

மற்றும் துப்பாக்கிலத்தி பிரயோகத்தால் ஏப்ரல், மே, ஜுன், ஜுலை மாதங்களில் 101 பேர்கள் மடிந்தார்கள், 427 பேர்கள் காயமடைந்திருக்கிறார்கள். பின் டிசம்பர் மாதம் வரை காயம்பட்டவர்கள் மடிந்தவர்கள் கணக்கு ஜாபிதா தயாராகவில்லை.

## இராமநாதபுரம் ஜில்லா போர்டு.

(ஒரு நிருபர்.)

இராமநாதபுரம் ஜில்லா போர்டின் விசேஷக் கூட்டமொன்று பிப்ரவரிமீ 27ல நடைபெற்றது. இராமநாதபுரம் ராஜா தலைமை வகித்தார். கூட்டம் ஆரம்பிக்கப் பட்டவுடன் வைஸ் பிரஸிடெண்ட் திரு. பொன்னுச்சாமி பிள்ளை எழுந்து, இக்கூட்டம் சட்டப்படி சரியாகப் பத்து நாட்களுக்கு முன்னர் நோட்டீஸ் கொடுத்துக் கூட்டப்படவில்லை யென்றும், நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர அனுமதிக்கும்பொழுது தலைவரால் அத்தீர்மானம் விவாதத்திற்கு வரப்போகும் கூட்டத்தின் தேதியும், நேரமும் குறிப்பிடப்படவில்லை யென்றும் ஆட்சேபித்தார். கூட்டம் செல்லத்தக்கதா, இல்லையா என்பதைப்பற்றி நீண்டநேரம் விவாதம் நடைபெற்றது. கூட்டம் செல்லும்படியானது தான் என்ற முடிவின் பேரில் நடவடிக்கைகள் தொடங்கப்பெற்றன. முதலாவதாக திரு ஆதிமூல நாயக்கர் ராஜவிஸ்வாசப் பிரமாணம் செய்தார். திரு. பிரான்மலை ராவுத்தர் வைஸ் பிரஸிடெண்ட் திரு. பொன்னுச்சாமிபிள்ளை மீது நம்பிக்கையில்லையென்ற தீர்மானத்தைப் பிரேரேபித்தார். திரு. எ. நா. காசி விஸ்வநாதன் செட்டியார் ஆமோதித்தார். திரு. கற்பூர சுந்தரபாண்டியன் தீர்மானத்தை எதிர்த்தார். தீர்மானம் ஓட்டுக்குவிடப் பட்டது. 19பேர் சாதகமாகவும், 6 பேர் பாதகமாகவும் ஓட் கொடுத்தனர். 4 பேர் நடு நிலைமை வகித்தார்கள்.

### அடுத்த கூட்டம்

போர்டின் சாதாரணக் கூட்டமொன்று இராமநாதபுரத்தில் 'லத்தாம்ஸ்' பங்களாவில் மார்ச்சுமீ 13ல வெள்ளிக்கிழமை காலை 9 மணிக்கு நடைபெறுமென்று அறிவிக்கப்படுகிறது.

—

## புதுக்கோட்டைச் செய்திகள்.

திவான்பகதூர் ராகவய்யா வருகை:— லண்டன் வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றிருந்த திவான்பகதூர் டி. ராகவய்யா பந்துலுகாரு பிப்ரவரிமீ 26ல காலையில் வந்து சேர்ந்தார். அரசாங்க உத்தியோகஸ்தர்களாலும், பொதுஜனங்களாலும் ரயில்வே ஸ்டேஷனில் ஆடம்பரமாக வரவேற்கப் பட்டார்.

ராஜீய மாறுதல்கள்:— திவான்பகதூர் ராகவய்யா பந்துலுகாரு பிப்ரவரிமீ 26-தேதி தமது நிர்வாக சபைத்தலைவர் பதவியை ஒப்புக் கொண்டார். முன்னர் இருந்தது போலவே திரு. கணபதி சாஸ்திரிகள் திவானாகவும், திரு சிவஞான முதலியார் பிரதம நீதிபதியாகவும் வேலை பார்ப்பார்கள்.

விவசாயக் கண்காக்ஷி:— ஏப்ரல்மீ 1-தேதி முதல் 7-தேதி வரை நார்த்தாமலையில் சிவன்கோவிலுக்கடுத்த கொட்டகையில் விவசாயம், கைத்தொழில் முதலியவற்றின் கண்காட்சி நடைபெறும்.

— —

### எட்டிமங்கலம்.

திருவாளர் ஜீவானந்தன் அவர்கள் காச்சியாபுரம் 'உண்மைவிளக்க நிலைய' மாணவர்கள் இருவரோடும் மாணவி திருமிகு செல்வி கிளிமொழியோடும் டை கிராமத்திற்கு 21-2-31ம் தேதி யன்று விஜயம் செய்தார்கள். அந்த திருவாளர் வி. நாச்சாணம்பலம் அவர்கள் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் கூடியது. அவ்வமயம் டை நிலையமாணவர் அழகப்பன் என்பவர் 'கல்வியின் அவசியம்' என்னும் பொருள் பற்றியும், திரு ஜீவானந்தம் அவர்கள் 'சீர்திருத்தம்' என்னும் பொருள்பற்றியும் பேசினார்கள். திரு. பொன்னையா அவர்கள் பேசியபின் கூட்டம் இனிது முடிந்தது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

— —

## அறிஞர்களுக்கு உதவி

பிரஞ்சு தமிழர்களில் பெரும் பாலோரை அவதிப்படுத்தும் வறுமையை ஒழிக்க ஒரு திட்டம் தயாரித்திருக்கின்றனர். காப்பிரைட் சுதந்தர சட்டத்தில் சிறிது திருத்த வேண்டுமென்று அத்திட்டம் கூறுகின்றது. தற்காலம் அவ்வாசிரியர் இறந்த 50 வருஷங்களுக்குப் பிறகே காப்பிரைட் சுதந்தரம் விலகுகின்றதென்ற அனுஷ்டானம் இருக்கின்றது. இப்புதிய திட்டத்திலோ, அந்த 50 வருஷத்திற்கப்பால் பிரசுரிப்போரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட வீதாசாரத் தொகையை வசூலித்து அந்தத் தொகையினால் திண்டாடும் புலவர்களுக்கு உதவி செய்யலாம் என்று அத்திட்டம் கூறுகின்றது. இது அநேக ஆசிரியர்களால் ஆதரிக்கப்படுகின்றது.

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி.மு.கோர்ட்டு 1931 ௵ O. P. No. 11.

(1) சிதம்பரம் செட்டியார் (மைனர்)
(2) சபாரத்தினம் செட்டியார் (மைனர்)
(3) பழனியப்ப செட்டியார் (மைனர்)
(4) அண்ணாமலை செட்டியார் (மைனர்)
(டை மைனர்களுக்கு தயாரும் அடுத்த சிநேகிதியுமான மீனாக்ஷி ஆச்சி மூலமாய்) } மனுதாரர்கள்.

(1) M. AR. R. M. அண்ணாமலை செட்டியார்
(2) M. A. ராமநாதன் செட்டியார்
(3) M. A. அருணாசலம் செட்டியார்
(4) M. A. பழனியப்ப செட்டியார் } சமீப பந்துக்கள்

டை மனுதாரர்களின் தகப்பனார் பள்ளத்தூர் மு. அரு. ரும. ப. முத்துக்கருப்பன் செட்டியார் 23-1-31ல் புதுக்கோட்டை ஸ்டேட் கனியபட்டியில் இறந்துபோய் டையாருக்கு மனுதார்கள் அவிபக்த குமாரர்கள் என்றும் வார்சுகள் என்றும் டை முத்துக்கருப்பன் செட்டியாருக்கு ஓரியண்டல் கெவர்மெண்டு செக்யூரடி, லைப், அஸ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட் (பம்பாய்) கம்பெனியில் பாலிஸி நம்பர் $\frac{263183}{15\text{-}5\text{-}1929}$ ன்படி அஸ்யூர் டான தொகை ரூ. 50000 போனஸ் ரூ. 2000 ஆக ரூ. 52000 யும் மனுதார்கள் அடையபாத்தியஸ்தர்களென்று சக்ஸஷன் சர்ட்டிபிகேட்டு பெற மனுதார்கள் டை நிம்மிரில் மனுக்கொடுத்து 16—3—31 ஈரங்கி வாயிதா ஏற்பட்டிருக்கிறது ஆக்ஷேபணையுள்ளவர்கள் டை தேதி பகல் 10 மணிக்கு டை கோர்ட்டில் ஆஜராகி தெரியப்படுத்திக் கொள்ளவேண்டியது.

Devakottai 26-2-31. } L. Venkatarama Iyer, Vakil.









## அமெரிக்காவில் பணக்கஷ்டம்.

### அநேக பாங்கிகள் மூடப்படுகின்றன.

நியூயார்க்கிலுள்ள பாங்க் ஆப் யுனைடெட்ஸ்டேட்ஸ் (அமெரிக்க அரசாங்க சம்பந்த மற்றது) அரசாங்க பாங்கி அதிகாரியால் கைப்பற்றப்பட்டு மூடப்பட்டது. இதற்கு வரவு 46,000,000 பவுன். பாதிபல கம்பெனிகளின் வரவாகும். இப்பாங்கி மூடப்பட்டு 1 மாதம் ஆகிறது. இதற்கு முன், நவம்பர் மாதத்தில் இந்தப்பக்கத்தில் மூடப்பட்ட பாங்கிகளில் இது ஐந்தாவதாகும். மற்றும் 15 பாங்கிகள் இந்தத் தேசத்தின் பல பக்கங்களிலும் மூடப்பட்டு விட்டன. இவற்றில் பணம் போட்டிருக்கின்றவர்கள் தங்கள் தொகைகளைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று வேகமாக வற்புறுத்தியதே இதற்குக் காரணமாகும். ஒரு பிரபல பாங்கரும் மற்றும் இரு அதிகாரிகளும் இத்துன்பத்தினின்றும் தப்புவித்துக் கொள்ள தற்கொலை செய்து கொண்டார்கள் என்று செண்டிரல் நியூஸ் கூறுகிறது. கொலம்பஸ் ஸேவிங்ஸ் பாங்கின் பொக்கிஷதாரரும் உபதலைவரும் ஹண்டிங்டன் நாஷனல் பாங்கியின் உபதலைவருமான வில்லியம் வில்லார்டு என்பவர் கொலம்பஸ் அதெரெடிக் கிளப்பில், தானே சுட்டுக் கொண்டிறந்தார். இவர் 58 வயதினர். 17 வயதில் வேலைக்காரப் பையனாக அமர்ந்து திறமையால் இவ்வுயர் பதவிக்கு உயர்த்தப்பட்டார். வெஸ்ட் பிரிங்பீல்ட்ஸ் பாங்கிக் காரியதரிசியாகவிருந்த ஜோஸப்வாரன் என்பவர் தன் அறையில் சுட்டுக் கொண்டிறந்து கிடப்பது தெரிந்ததும், கடன்காரர்களின் தொல்லையால் பாங்கியும் மூடப்பட்டுவிட்டது. ஆர்லிங்டனில் பாங்கி காஷியர் ஜான்பால்ஸ் என்பவர் தலையில் பாய்ந்த குண்டினால் மோட்டார் காரில் சாகுந்தருவாயில் கிடந்தார். துப்பாக்கியும் வண்டிக்குள் கண்டு பிடிக்கப் பட்டது. அலபாமா பாங்கின் தலைவர் தற்கொலை செய்து கொண்டுவிட்டார். பிராவேஷர் அரசாங்க பாங்கின் காஷியரும் தூக்கிட்டுக் கொண்டார். லீவர் வில்லி குடியானவர் வியாபாரிகளின்பாங்கி 163000 டாலர்கள் கடனால் மூடப்பட்டு விட்டது.

—

### அமெரிக்கா-ஐரோப்பா ஆகாயத் தபால்.

அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்குமிடையில் ஆகாயத்தபால் வசதி ஏற்படுத்த முயற்சிக்கப்படுகிறது. அமெரிக்காவிலுள்ள பல ஆகாயவிமான நிலையங்களுக்கு யுனைடெட்ஸ்டேட்ஸின் தலைமைத் தபால் அதிகாரி இது சம்பந்தமாகக் கடிதங்களெழுதியுள்ளார். அக்கடிதத்தில், முதல் மூவாயிரம் பவுண்டு கடிதங்களுக்கு மைலுக்கு 8 ஷிலிங் வீதம் தருவதாகவும், பிறகு ஆயிரம் மைல்களுக்கு பவுண்டுக்கு 4 ஷிலிங் வீதம் தருவதாகவும் கூறியிருக்கிறார். இவ்விமானங்கள் அமெரிக்கச்சாமான்களாலேயே ஆக்கப்பட்ட அமெரிக்கருடைய விமானங்களாகவே இருப்பதோடு அமெரிக்கராலேயே ஓட்டப்பட வேண்டுமென்றும், தபால்களுக்கு இடையூறின்றிப் பிரயாணிகளை ஏற்றிச் செல்வதில் ஆட்சேபணையில்லையென்றும் கூறுகிறார். இவ்வாகாயத் தபால் பிரயாணம் முதன் முதலாக 1—6—31 ல் ஆரம்பிக்கப்பட்டு ஒருவருடம் அமெரிக்காவிற்கும் பெர் மூடாவுக்கும் நடைபெறும். பின்னர் ஐரோப்பாப் பிரயாணம் துவக்கப்பெறும்.

— —

### புதுவையில் பெரிய மீன்.

பிப்ரவரி 18-ல நடுப்பகல்புதுவைக்கடற்கரையில் இறந்த மீனொன்று அலைகளால் ஒதுக்கப்பட்டுக்கிடந்தது. 20 அடிநீளமும் 8 அடி அகலமும் உடையதாம். சுமார் 20பேர் சிரமத்துடன் அதைக் கரையேற்றினார்கள். இதை மகரமீன் என்று கூறுகிறார்களாம்.

### 5 கோடி ரூபாய் கடன் வஜா.

ஆப்கன் கவர்ன்மெண்டார் பொதுஜனங்களுக்கு வியாபாரக்கடனாகவும், இதரகடனாகவும் கொடுத்து வசூலிக்க முடியாதிருக்கும் 5 கோடி ரூபாய் கடன்களை வஜா செய்ய உத்தரவிட்டிருக்கின்றனர்.

## மணமகனுக் குரிய விதிகள்.

### பிரான்ஸ் டாக்டர்கள் யோசனை

பொதுவாக மனைவிமார், தங்கள் கணவன்மார் தங்களை எவ்வகை ஆபத்தினின்றும், கஷ்டங்களினின்றும் விடுவிப்பார்களென்று நம்புவது சகஜம். ஆயினும் பெரும்பான்மையோரான கணவன்மார் அதற்குத் தக்க தேக பலத்துடனோ, தைரியத்துடனோ அனுபவத்துடனோ இருப்பதில்லை. ஆதலின் பிரான்ஸ் தேச டாக்டர்கள் பலர் ஒன்று சேர்ந்து விவாகம் செய்து கொள்ள விரும்பும் மணமகன் கீழ்க்கண்ட விதிகளை நிறைவேற்ற வேண்டும் என்று கண்டிப்பாகக் கூறுகின்றனர். அவையாவன:— மணமகன்மார் ஒரு நிமிஷத்துக்குள் 400 மீட்டர்கள் தூரம் ஓடக்கூடிய சக்தியுடையவர்களாயிருக்க வேண்டும். எப்படிப்பட்ட கஷ்டமான பாதைகளிலும், குறுக்கு வழிகளிலும் ஓட வேண்டும். வழியில் அகழ்களோ, வேலிகளோ, உயரமான சுவர்களோ இருந்தாலும் அவைகளையெல்லாம் கடந்து ஓடக்கூடியவர்களாயிருக்க வேண்டும். இதற்காக அவர்கள் விவாகத்துக்குமுன் மூன்று கஜ அகலமுள்ள கால்வாய்களையும் அவர்களுடைய புஜம் உயரம் வரையுள்ள சுவர்களையும் தாண்டுகிறவர்களாயிருக்க வேண்டும். மேலும் கணவனும் மனைவியும் உலாவச் செல்லும் போது தவறிக் கீழே விழுந்து மனைவியின் கால் நடக்க முடியாமற் போனால் அவளைத் தூக்கிச் செல்லவும் சக்தியுடையவனாய் இருக்க வேண்டுமாதலால் 140 பவுண்டு எடையுள்ள சாமான் மூட்டையை கால் மைல் தூரமாவது தூக்கிச் செல்லும் சக்தியுடையவர்களே விவாகம் செய்து கொள்ள வேண்டும்.

இவைகள் மட்டுமேயன்றி மற்றொரு கடமையையும் அவர்கள் பூர்த்தி செய்யவேண்டும். ஆற்று வெள்ளத்திலோ, அல்லது சமுத்திரத்தில் படகில் செல்லும் போதோ மனைவி தவறிவிழுந்து விட்டால் அவளைக் காக்க வேண்டியது கணவன் கடமையாதலால் விவாகம் செய்து கொள்ளுமுன் ஒருவன் 200 கஜம் தூரம் தண்ணீரில் நீந்தக்கூடியவனாகவும், ஆறு அடி ஆழத்திலிருந்து 140 பவுண்டு எடையுள்ள சாமானைக் கொண்டுவருகிறவனாகவும் இருக்க வேண்டும். ஆகவே விவாகம் செய்து கொள்ளுமுன் ஒவ்வொருவரும், ஓடுதல், குதித்தல், நீந்துதல், முஷ்டி யுத்தம் முதலியவைகளில் தக்க தேர்ச்சி பெற்றிருக்க வேண்டுமென்பது பிரான்ஸ் டாக்டர்களின் அபிப்பிராயமாகும்.

— —

### புதிய ஆகாயவிமானம்.

#### நெருப்புக்கு அஞ்ச வேண்டியதில்லை.

குண்டுக்கும் நெருப்புக்கும் தப்புவித்துக் கொள்ளக்கூடிய ஆகாய விமானம் ஒன்று 900000 பவுன் செலவில் அமெரிக்காவில் அமைக்கப்பட்டிருக்கின்றது. இக்கப்பல் 1929 ம் வருஷத்தில் ஆரம்பிக்கப்பட்டும் அழிந்த ஆகாயவிமானமாகிய R 101 க்குப் பிறகே அமைய வேண்டிநேர்ந்தது. எரியுந் தன்மையுடைய மேல் மூடிகள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள மெல்லியதும் வல்லமையுமுள்ள ஆல்கிளாட் என்னும் உலோகத்தினால் செய்யப்பட்டிருக்கிறது. நெருப்பையும்குண்டையும் எதிர்க்கத்தக்க எரியாத ஹீலியம்கியாஸ் உபயோகிக்கப்படும். இதன் உருவம் கிராப் ஸெப்லினைவிடப் பெரியதாய் மணிக்கு 100 மைல் செல்லக் கூடிய வேகமுடையதாயுமிருக்கிறது. ஆகாயத்திலேயே இருப்பத்திரண்டு நாட்கள் தங்கப் போதிய சாமான்களை ஏற்றிக் கொள்ளத்தக்கது. 40 வேலை யாட்களுடன் ஆகாயத்தில் அழகாகவும் அமைதியாகவும் செல்லக்கூடியது.

— —

## பலதிரட்டு.

### 94 வயதில் கல்யாணம்.

அமெரிக்கா கண்டத்தில் ஒண்டோரியாவைச் சேர்ந்த டிரென்டன் நகரத்திலுள்ள 94 வயதுள்ள மிஸ்டர் சாமுவேல்யாரோ என்பவர் 63வயதுள்ள ஒருவிதவையை கல்யாணம் செய்துகொள்ளப்போகிறார். இவருக்கு மூன்றும் முறையாக இக்கல்யாணம் நடைபெறப்போகிறது. மிஸ்டர் சாமுவேல் யாரோவினுடைய பேரப்பிள்ளைகளுக்கு ஐந்து பேரப்பிள்ளைகள் இருக்கின்றனர். அவருடைய இரண்டாவது மனைவி அக்டோபர் மாதத்தில் இறந்துபோனாள். இக்கல்யாணம் கடிதம் மூலம் முடிவுசெய்யப்பட்டது. தனது விருத்தாப்பிய காலத்தில் தன்னைப்பார்த்துக் கொள்வதற்காகவே விவாகம் செய்து கொள்வதாக மிஸ்டர் சாமுவேல் கூறினார்.

### வேல்ஸ் இளவரசருடன் கைகுலுக்கினேன்.

இலங்கையைச் சேர்ந்த அம்பலாங் கோட்டை போஸ்டாபீசில் சமீபத்தில் ஒரு வேடிக்கைச் சம்பவம் நிகழ்ந்தது. ஒரு உபாத்தியாயினி சேவிங்ஸ் பாங்கில் பணம் போடுவதற்காக போஸ்டாபீஸிற்கு வந்தார். அவர் போட்டிருந்த பாதரட்சை பழசாக இருப்பதை பார்த்து டெலிபோனில் வேலைபார்க்கும் மாது பரிகாசம் செய்தார். அதற்கு அந்த உபாத்தியாயினி, தான் வேல்ஸ் இளவரசருடன் கைகுலுக்கியதாகவும், தனது சகோதரர் கனம் ஆகாகான் அரசருடன் சமமாக போஜனம் அருந்தியதாகவும் அத்தகைய பெருமை வாய்ந்த தன்னை டெலிபோன் மாது பரிகாசம் செய்வதால் என்ன குறைவேற்பட்டு விடப்போகிறதென்று கூறினார். போஸ்டாபீஸிலிருந்தவர்கள் எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள்.

### இலங்கையில் ஜனக்கணிதம்.

பிப்பரவரி மீ 26உ இரவு இலங்கையில் ஜனக்கணிதம் எடுக்கப்பட்டது. இலங்கை முழுவதும் 5000000 ஜனங்கள் இருக்கின்றனரென்றும், கொழும்பில் மட்டும் 270000 ஜனங்கள் இருக்கின்றனரென்றும் தெரிகிறது. 1901ம் வருடம் கணக்கெடுக்கப்பட்ட பொழுது முன் எடுக்கப்பட்ட ஜனக்கணக்கினின்றும் 553000 கூடுதலாக இருந்தது. 1911ம் வருடத்தில் 540000 கூடுதலாக இருந்தது. 1921ல் 392000 அதிகமாக இருந்தது.

### 85 பவுனில் கார்.

ரோவர் மோட்டார் கம்பெனியார் புதிய தோர் காரைத் தயாரித்து வருகிறார்கள் அதன் விலை 85 பவுன். அதில் நான்கு பேர் உட்காரலாம். மணிக்கு ஐம்பது மேல் வேகம் செல்லுமென்றும், ஒரு காலன் பெட்ரோலுக்கு ஐம்பது மைல் போகுமென்றும் கூறப்படுகிறது. இது வரை வந்துள்ள விலை குறைவானகாரில் இதுவே முதன்மையானது. இக்கார் கூடிய விரைவில் விற்பனைக்குவரும்.

—

### 100,000 பவுன் விலையுள்ள வைரம் தோண்டி எடுக்கப்பட்டது.

யாதொரு ஐவேஜுமில்லாத இரண்டு மனிதர்கள் தற்சமயம் உலகத்திலிருக்கிற பெரிய வைரங்களில் ஒன்றைக் கண்டுபிடித்தார்கள். அவர்கள் சுரங்கக்கனி இருக்குமிடங்களைத் தேடுகிறவர்கள். தென் ஆப்பிரிக்காவிலுள்ள டிரான்ஸ்வால் தேசத்து மேல்புறம் லிச்டென்பர்க் ஜில்லாவில் அநேக மாதங்களாகத் தேடிப் பார்த்தும் ஒன்றும் அகப்படவில்லை. ஜனவரி மீ 31-ந் தேதி தங்கள் சட்டைப்பையைத் தேடிப்பார்த்த போது 9 பென்ஸ் மீதமிருந்தது. அதைத் தாங்களும் தங்கள் வேலை ஆட்கள் 8 பேரும் சாப்பாட்டிற்குச் செலவழித்து விட்டார்கள்; வேறு பணமொன்றுமில்லை; வைரக்கனிகளில் தேடுவதை நிறுத்திவிட்டுத் திரும்புமுன்னால் இன்னுமொரு தடவை தோண்டிப் பார்க்கத் தீர்மானித்து தோண்டியதில் 200 காரெட் எடை பெறுமான (சுமார் ஒன்றரை அவுன்ஸ்) ஒரு வைரக்கல் அகப்பட்டது.

வைர விலைமதிப்பில் தேர்ந்தவர்கள் புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்ட வைரம் குறைந்த பக்ஷம் 100,000 பவுன் விலை பெறுமென்று மதிப்பிடுகின்றார்கள். கீழே குறிப்பிட்டிருக்கிற புகழ்படைத்த வைரங்கள்; விலைகளிலிருந்து வைர விலை மதிப்பில் எடை மாத்திரம் முக்கிய குணமாகாதென்பது புலப்படும்.

| | பவுன் |
|---|---|
| கோஹினூர்..................106 காரெட்டுகள் | விலை 120,000 |
| ஹோப்டைமண்ட்..........44 காரெட்டுகள் | விலை 60,000 |
| ஸ்டார் ஆவ் தி சவுத்......125 காரெட்டுகள் | விலை 80,000 |

கோஹினூர் வைரம் பிரிட்டிஷ் ராஜா கிரீடத்தில் வைத்திருப்பவைகளில் ஒன்று உலகத்திலுள்ள பெரிய வைரம் குல்லினன் என்பதாகும். அதன் எடை பல விதமாகச் சொல்லப்படுகிறது. அது மேரி ராணி அவர்களால் ராஜாங்கக் கொண்டாட்டங்களில் அணியப்படுகிறது. அது 5,000,000 பவுன் வரை கிரயம் பெறலாமென்று சொல்லப்படுகிறது.

—

### ஹைக்கோர்ட்டில் வாய்தா கோரும் விஷயம்.

பின்வரும் அறிக்கை ஹைக் கோர்ட்டில் வெளியிடப்பட்டிருக்கிறது:—

வக்கீல்கள் கட்சிக்காரர்களிடமிருந்து வகாலத்து பெறவில்லையென்றாவது அல்லது வக்கீல் செளியூரிலோ அல்லது வேறு கோர்ட்டிலோ ஆஜரா யிருப்பதாகவோ கூறி வழக்கு விசாரணையை ஒத்திபோட வாய்தா கோரினால் அக்கோரிக்கை கவனிக்கப்படமாட்டாது. கிரிமினல் வழக்குகளில் வாய்தா எக்காரணத்தினாலும் கொடுக்கப்படமாட்டாது. சிவில் வழக்குகளுக்கு விசாரணை ஜாபிதா தயாராகுமுன் டிபுடி ரிஜிஸ்திரார் முன்னிலையில் எதிர்க்கட்சி வக்கீலின் அனுமதியைக் கொண்டு வாய்தா வாங்கிக் கொள்ளலாம். ஜாபிதா தயாரான பிறகு ஜட்ஜுகள் முன் மனுக்கொடுத்தால் வாய்தா ஒரு தரம் மாத்திரம் அனுமதிக்கப்படும். இரண்டாம் முறை வாய்தா எக்காரணத்தினாலும் கொடுக்கப்படமாட்டாது.

—

### ஏசு கிறிஸ்து திருடரா?

லண்டன், பிப்ரவரி, 19—

விஎன்னா யூனிவர்ஸிடி சரித்திர ஆராய்ச்சிக் கழக ஆசிரியர் டாக்டர் எய்ஸ்லர் "கிறிஸ்துவும் ஜான்பாப் டைசும்" என்னும் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். அதில் கிறிஸ்து, குள்ளமாயும், கூன் விழுந்தும் சுமார் 4 அடி 9 அங்குல உயரமுள்ள உருவமுடையவராயு மிருந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார். டாக்டர் எய்ஸ்லர் பிரிட்டனிலுள்ள பல யூனிவர்ஸிடிகளிலும், பாரிஸ் முதலிய இடங்களிலும் கிறிஸ்துவைப்பற்றி பல பிரசங்கங்கள் செய்திருக்கிறார். அவர் அப்புஸ்தகத்தில் ஏசு கிறிஸ்துவின் சரித்திரத்தைப்பற்றி மீண்டும் குறிப்பிட்டிருப்பதாவது:—

கிறிஸ்துவின் சரித்திரத்தை அக்காலத்தில் ஆராய்ச்சி செய்து எழுதிய ஜோசபஸ் என்டவரின் புஸ்தகத்திலுள்ள பல உண்மைகளை கிறிஸ்தவர்கள் வேண்டுமென்று நீக்கிவிட்டார்கள். இதனால் கிறிஸ்துவைப் பற்றி உண்மையான விஷயங்களை அறியக் கூடாமற் போயிற்று. கிறிஸ்துவைப் பின்பற்றிய சிஷ்யர்களெல்லாம் ஆயுதந்தாங்கிய திருடர்கள். அவர்கள் ஜெருசலேம் நகரைப் பிடிக்க சதி செய்ததால், அச்சதியைக் கண்டுபிடித்துக் கிறிஸ்துவை சிலுவையில் அறைந்து கொன்றார்கள். கிறிஸ்து மரித்த மூன்றும்நாள் கல்லறையினின்றும் உயிர்த்தெழுந்தாரென்பது பொய். கிறிஸ்துவுடன் பிறந்த இரட்டைக் குழந்தையான மற்றொருவரைக்காட்டி கிறிஸ்து உயிரானதாகக் கூறினார்கள்.

—

மனிதர்களுக்குப் பதிலாக பொம்மைகளையே நர்த்தனமாக நடிக்கச் செய்யும் முறையை ஜெர்மனியில் கண்டுபிடித்திருக்கிறார்கள், இவைகள் மின்சார சக்தியால் ஓடவும், சுவைமாடவும், பேசவும் செய்கின்றன. இயற்கையில் மனிதர்கள்போல் நடப்பதும் பேசுவதும் பெரிய ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறது.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

இல்லையே என்று எல்லோரும் விசனப்பட்டார்கள்.

குப்புச்சாமி நல்ல பையன். மிகவும் ஏழை. பொறுமையும் அறிவும் நிறைய உடையவன். மாமியார் வீட்டில் யார் பேரிலும் அவன் குறைகூற விரும்பவில்லை. பாழாய்ப்போன நாட்கள் புரட்டாசி மாதத்தைக் கொலை செய்துவிட்டனவே என்று வாய்விட்டுக் கூறி வருத்தப்பட்டான். ஐப்பசி மாதம் பிறந்தது. அவன் பெண்ணை அனுப்பும்படி கேட்கவில்லை. ஏனெனில் அவன் அடைந்த அனுபவத்தைக்கொண்டு அது "எட்டாவது மாதம், இரட்டித்த மாதம் அனுப்ப முடியாது" என்பதை அவன் அறிவான். மனம் தளர்ந்தது. தனது அன்பிற்குரிய மனைவியை அழைத்து "போய் வருகிறேன். சுகமாயிரு" என்று கூறி குழந்தைக்கும் ஒரு முத்தமிட்டு நாகைக்குச் சென்று கார்த்திகை எப்போது பிறக்குமென எண்ணிக்கொண்டேயிருந்தான். வீடும் இடிந்து அது மண்டையிலும் விழுந்ததுபோல குப்புச்சாமியின் புண்பட்ட மனத்தில் அவனுடைய வேலை போயிற்று என்ற செய்தி புண்ணில் வேல் செருகுவது போன்றிருந்தது. அவன் இருதயம் உடைந்தது. நோய்வாய்ப்பட்டு பாயும் படுக்கையுமாக அவனுடைய வாழ்க்கை மாறிவிட்டது.

கதையை வளர்க்க விரும்பவில்லை. விஷயம் அவ்வளவுதான். எழுதக் கைநடுங்குகின்றது. திருச்சியில் உள்ள குப்புச்சாமியின் மாமனாருடைய கையில் தந்தி யிருந்தது. அவன் மறு உலகம் சென்ற செய்தியை அறிந்து மனம் பதைத்தது. எல்லோரும் அலறி, அடித்துக்கொண்டு இரயில்வே ஸ்டேஷனுக்கு ஓடினார்கள். ஐப்பசி-மீ 8-வது மாதம் என்றாவது, 19உ சனிக்கிழமை கிழக்கே சூலம் என்றாவது பார்க்க முடிந்ததா? இல்லை. குப்புச்சாமி தன்னுடைய மனைவி சமைத்த உணவை உண்ண ஆவலோடு இருந்தான். ஆனால், அதற்குப் பதிலாக சமைக்காத பச்சரிசியை தன்னுடைய மனைவியின் கையால் தான் பிரேதமாகவிருந்து வாயில் வாங்கிக்கொண்டான்.

அன்பர்களே! இத்தகைய அநீதியை ஒரு நல்ல மனிதன் செய்வானா? நம்முடைய பெரியோர்களில் அறிவிற் சிறந்த ஒருவர் இக்கருத்தை உள்ளமைத்தே நாள் செய்கின்ற தீமையை நல்ல மனிதன் செய்யான் என்ற பொருள்பட "நாள் செய்வது நல்லோர் செய்யார்" என்ற பழமொழியை உண்டாக்கி யிருக்கவேண்டும் என்றெண்ணுகிறோம். வாசகர்களாகிய நீங்களும் அறிவுடையவர்களாதலினால் இம்மூன்று பொருள்களையும் நன்கு சிந்தித்து கொள்வதைக் கொண்டு, தள்ளுவதைத்தள்ளி, செய்வன செய்து, சிறப்பெய்தி வாழவேண்டுமென்பதோடு இக்கட்டுரையை இத்துடன் முடிக்கிறோம்.

குமரன் மாதப்பதிப்பு.

## கணித ஜோதிடம்.



## யுத்தத்தின் உருவம்.

### அதனால் ஏற்பட்ட நஷ்டங்கள்.

உலகசமாதானத்திற்காக உபதேசஞ்செய்துகொண்டுவரும் புனித ஞானியாகிய ஜர்மன் அறிஞர் கூறுவதாவது:—நான்கு வருஷங்கள் நடந்தமகாயுத்தத்தில் 11000,000 ஜனங்கள் இறந்தனர். 19000 000 ஜனங்கள் முடமாயினர். 100,000,000000 பவுனை யுத்தம் விழுங்கிவிட்டது. இவ்வாறு இப்பணம் செலவு செய்யப்படாமலிருந்திருப்பின் யுனைடெட் ஸ்டேட்ஸ், கானடா, ஆஸ்டிரேலியா, பிரான்ஸ், பெல்ஜியம், ஜெர்மனி, ருஷ்யதேசங்களிலுள்ள ஒவ்வொரு குடும்பத்திற்கும் 5 ஏகர் நிலத்தில் கட்டப்பட்ட 500 பவுன் பெறுமான சின்ன வீடும் 250 பவுன் பெறுமான சின்ன தளவாடங்களும் கொடுக்கமுடியும். வதோடு 20000 குடும்பங்களுக்கு ஒரு ஆஸ்பத்திரியும், சர்வகலாசாலையும், பல பள்ளிக்கூடங்களும், உபாத்தியாயர்கள், தாதிகள், வைத்தியர்களுக்கு போதிய சம்பளமும் உதவலாம். மரணத்தில் இறந்தவர்களையெல்லாம் முறையாக அடுக்கிப்பார்த்தால் பாரிஸிலிருந்து ஐரோப்பா கண்டத்தைக் கடந்து ஆசியா கண்டத்திலுள்ள விளாடிவாஸ்டாக் என்னும் ஊர்வரையில் நேராகப் புதைக்கலாம். கடைசிப் பிணம் ஜப்பான் கடலால் அலைமோதப்படும். யுத்தத்தின் உருவத்தை இனி வேறு விதத்தில் எடுத்துக்கூற முடியாதல்லவா?

—

## ஆரம்பக் கல்வியின் அவசியம்.

### வோட்டர் அறிவைப் பெருக்கவழி.

லண்டன், பிப், 17—

கிழக்கிந்தியச் சங்கத்தில் ஸர் பிலிப் ஹார்ட்டாக் ஒரு பிரசங்கஞ் செய்கையில், படித்த வாக்காளரை உண்டுபண்ண வேண்டி ஆரம்பக் கல்வியைச் சரிவர நிர்மாணிக்க வேண்டுவது புதிய இந்தியாவின் முக்கியப் பிரச்னைகளில் ஒன்றென வற்புறுத்தினர். புதிய கவர்ன்மெண்டு கல்வி ஸ்தாபனங்களேயே அடியுடன் திருத்தியமைக்க வேண்டுவது அவசியமாகிறதென்றும், எங்கும் ஆரம்பக் கல்வியைப் பரவச் செய்யும் விஷயத்தில் மத்தியக் கவர்ன்மெண்டிற்குப் பொறுப்பிருக்க வேண்டுமென்றும் ஹார்டாக் கமிட்டியார் கூறியதைத் தாம் வற்புறுத்துவதாகவும் ஜெனரல் ஹார்டாக் கூறினர்.

டாக்டர் பாஞ்சபே தலைமைவகித்துப் பேசுகையில், கல்வி முன்னேற்ற மடைய வழிகாட்டி ஒத்துழைப்பதில் மத்திய கவர்ன்மெண்டிற்கும் பொறுப்பிருக்க வேண்டியதுதானென்றும், ஆனால் முக்கியப் பொறுப்பு மாகாணங்களுடையதாகவேயிருக்க வேண்டுமென்றும் கூறினர்.

—

## நெல்லிக்குப்பம்

### சமூக சீர்திருத்த மகாநாடு.

பிப்ரவரி 22

நெல்லிக்குப்பம் வணிகர் சத்திரமைதானத்தில் அமைக்கப்பட்டிருந்த கொட்டகையில் இன்று சமூக சீர்திருத்த மகாநாடு நடைபெற்றது. ஊர் முழுமையும் கொடிகளாலும், வளைவுகளிலும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. திருவாளர்களான இராமசாமிப்பெரியார், கண்ணப்பர், குருசாமி முதலிய தலைவர்களை மேளவாத்தியம் முழங்க ஊர்வலமாக மகாநாட்டுக் கொட்டகைக்கு அழைத்து வந்தனர் திருவாளர்களான இராமசாமிப் பெரியார், ஜம்புலிங்க முதலியார் ஆகியவர்களுக்கு உபசாரப்பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. சுயமரியாதைக் கொடியை திரு. குருசாமி ஏற்றினர். மகாநாட்டுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு சௌந்திர பாண்டியன் அவர்கள் வர இணங்காததனால் தென்னாற்காடு ஜில்லா போர்டு பிரஸிடெண்டு திரு. முத்துக்குமாரசாமி செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். திருவாளர்களான இராமசாமிப் பெரியார், கண்ணப்பர், குருசாமி ஆகியவர்கள் சமூகச் சீர்திருத்தத்தின் அவசியத்தைப் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.





## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.

1931-ம் ஹு O. S. No 46

1931-ம் ஹு I. A. No 175

கஸ்பா தேவகோட்டையிலிருக்கும் சின்னய்யா செட்டியார் குமாரர் சி. ராம. ராமநாதன் செட்டியார்— வாதி.

1. ஷை ஊர் ஜெயினிலா அலிம்சா மகன் மம்மது முகைய்தீன் அலிம்சாசாயி.
2. ஷை ஊர் இ. பி. பீர்தம்பி ராவுத்தர் மகன் ஷேக் முகைதீன் ராவுத்தர்.
3. ஷை ஊர் செ. முகம்மது ராவுத்தர் மகன் சையத் காதிராவுத்தர்.
4. ஷை ஊர் சை. ராவுத்தன் மகன் இபுராம்சா ராவுத்தர்.
5. ஷை ஊர் சொ. சையது இஸ்மால ராவுத்தர் மகன் காதர் ராவுத்தர்.
6. ஷை ஊர் சின்னசாயபு மகன் மீராராவுத்தர்.
7. ஷை ஊர் சின்னத்தம்பி ராவுத்தர் மகன் காதர் முகைதீன் ராவுத்தர்.— பிரதிவாதிகள்.

இந்த நிம்பரில் வாதி, தேவகோட்டை பள்ளிவாசலுக்குச்சேர்ந்த மகம்மதியர்கள் எல்லாருக்குமாக இந்த நிம்பர் பிரதிவாதிகளை பிரதிநிதிகள் முறையில் பிரதிவாதிகளாகச் சேர்த்து தவா பிராதுகொண்டுவர அனுமதி கோறி மனுப்போட்டு ஷை மனுவின் முடிவுக்காக 26-3-31 தேதி வாயிதா ஏற்பட்டிருக்கிறது.

அது விஷயமாக ஷை பள்ளிவாசலுக்குச்சேர்ந்த மற்றவர்கள் யாரும் ஷை நிம்பரில் பிரதிவாதிகளாகச் சேர்ந்துகொள்ள அபிப்பிராயப் படுகிறவர்கள் ஷை கோர்ட்டில் ஷை வாயிதா வன்று காலை 11 மணிக்கு ஆஜராகி ஷை விஷபத்தைத் தெருவித்துக் கொள்ள வேண்டியதென்று இதன் மூலம் அறிவிக்கப் பட்டிருக்கிறது.

எ. ரேங்கசாமி அய்யங்கார்
அட்வொகேட்
தேவகோட்டை
26—2—1931

—

## இந்தியாச் சட்டசபை உப தேர்தல்.

அம்பாவாடி டிவிஷனிலிருந்து இந்தியாச் சட்டசபைக்கு பாய் பரமானந்தர் போட்டியன்னியில் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

நமது வைத்தியசாலை பழனியில் ஸ்தாபித்து 26-வருஷ ஆகிறது. பழனியில் முதல் முதல் ஸ்தாபிக்கப்பட்ட வைத்தியசாலை இதுவேயாகும்.

ரிஜிஸ்டர்.



# பழனி வைத்திய ஆசிரியர் ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை அவர்களின்

# தாம்பிர பஸ்பம்

## சாப்பிட்டு தீராத குஷ்ட ரோகங்களெல்லாம் தீர்ந்துவிட்டதற்கு அடையாளமான போட்டோ படங்களையும், நற்சாட்சிகளையும் கவனித்து மருந்தை வாங்கிச் சாப்பிடுங்கள்!

100-வேளை தாம்பிர பஸ்பம் அனுபானத்துடன் ரூபா 50  50-வேளை ரூபா 25. ஏழைகளுக்குப் பாதிவிலை

சுகம்.



வியாதி.



எனக்கு 10வருஷகாலமாக நெற்றி, மார்பு, புஜம், முதுகு, தொடை, இவைகளில் வெளரிய செம்மேகப்பத்துக்களுண்டாகி கெண்டைக்காலில் கருப்பு பத்துக்கள் விழுந்தும் திமிரேரிசாலை யற்றுப்போய் உள்ளங்கை நெளிந்து விரல்கள் மடங்கி ஒவ்வொரு விரல்களாய்ப் புண்ணாகி இத்து இத்து விழுந்து விட்டது. இப்படியே கால் விரல்களும் ரணமாகி இத்து விழுந்து விட்டது காலில் குழிப்புண்ணும் விழுந்து புரையோடி கை, கால் ரணங்களுடன் நான் அவஸ்தைப்பட்டேன். தங்கள் தாம்பிரபஸ்பம் வாங்கிச்சாப்பிட்டதில் விரல் ரணங்களெல்லாம் மொண்ணையாகி யமட்டில் ஆறிவிட்டது. மடங்கிப்போன விரல்கள் எல்லாம் நிமிர்ந்துவிட்டது குழிப்புண்ணும் மள மள வென்று ஆறி பத்துக்களெல்லாம் மறைந்து விட்டது. திமிர் நீங்கிச் சொரணையுண்டாகி விட்டது. அதற்கடையாளமாக ஆதியில் ஒரு போட்டோவும் இன்று ஒரு போட்டோவும் பிடித்துக் கொடுத்திருக்கிறேன். இதைத்தாங்கள் அவசியம் பேப்பரில் பிரசுரிக்கவேண்டியது. அப்போது நான் ஜனங்கள் கம்புவார்கள் ஷை ரணங்களில் சீழ் வடிந்து அதுகளில் ஈ, எறும்பு மொய்த்து துர் நாற்றம் சகிக்கமுடியாமல் உயிரோடு நாக வேதனையில் அழுந்தினேன். நான்பட்ட கஷ்டத்தை சொல்லவும் எழுதவும் முடியாது என்னைப் பார்த்தவர்களெல்லாம் பரிதாபப்படுவார்கள். எத்தனையோ ஊசி போட்டும் அநேகமருந்துகள் சாப்பிட்டும் ரணங்கள் ஆறவில்லை. தங்கள் தாம்பர பஸ்பம் 6மீ சாப்பிட்டதில் என் குஷ்டரோகம் பூரா சொஸ்தமடைந்துவிட்டது.

**கோவிந்தசாமி, திருக்கோவிலூர், 6—3—28**

நமது தாம்பரபஸ்பத்தால் வெள்ளக்குஷ்டம் தீர்ந்ததாகச் சொல்லுவதை கவனியுங்கள்:— தங்களுடைய தாம்பிர பஸ்பத்தை 20 நாள் சாப்பிட்டேன். சரீரத்திலுள்ள வெண்மேகங்களும் காலிலிருந்த கட்டிகளும் பூர்ண சௌக்கியம். தங்கள் வைத்தியசாலை சமன்மேலும் பெருக கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

N K. கோவிந்தன் செட்டியார் சிகப்பு வியாபாரம், நெ. 95. செங்குந்தர் வீதி, புதுச்சேரி.

**கரூர் தாலூகா பள்ளபட்டி நத்தர்சா ருவுத்தர், போட்டோபடத்தையும் நற்சாட்சியையும் கவனியுங்கள்:—**



எனக்கு இரண்டு காலும், கைய், வயர், உடம்பு பூராவும் வீங்கி வலதுகாலில் 4 குழிப்புண்ணும், இடதுகாலில் குழிப்புண்ணும் புரையோடி சீயும் ஒழுகி வலது கால் பெருவிரல் இத்துக் குடவளை பாய்விட்டது மேலெல்லா மொத்தை மொத்தையாய் சிகப்புத் தடிப்புகளுமிருந்தது. தங்கள் தாம்பா பஸ்பம் ஒருமண்டலம் வாங்கிக்கொண்டு போய்சாப்பிட்டதில் தடிப்புகள் மறைந்து, காலிலுள்ள குழிப்புண்களெல்லாம் ஆறிவிட்டது. வலதுகால் பெருவிரலடியிலிருந்து எரு ஆணியானது கடவாய்ப்பல் மாதிரி அடியில் ஒரு கட்டையேற்பட்டு அதிலிருந்து ரோமம் மாதிரி நரம்பு ஏற்பட்டு 2 அங்குல நீளம் விழுந்தது பொனரியெண்ணையைப் பஞ்சில் நனைந்துப் போட்டுவந்தேன். ஒரு மாதத்தில் ஆறிவிட்டது. மற்ற ரணங்களில் முளை ஏற்பட்டு காளுக்குநாள் அருந்தி வெளியே வந்து தானே விழுந்துவிட்டது. இனி நான் பிழைப்பேன் என்று யாரும் நம்பவேயில்லை. 70-மைல் என்னை வண்டியில் போட்டு தங்களிடம் கொண்டுவந்தார்கள. தாங்களும் நேரில் பார்த்து பிழைப்ப தரிதென்றும், இவ்விருந்து மருந்து சாப்பிடக் கூடாது ஊருக்கேபோய் மருந்து சாப்பிடுங்களென்று தாம்பா பஸ்பமும், சூ. சூரணமும் கொடுத்தீர்கள். அந்தப்படி நான் ஊருக்குப்போய்ச் சாப்பிட்டேன். என் குஷ்டவியாதி பூராவும் சொஸ்தமாகிவிட்டது. அதற்கடையாளமாகாலும், இரண்டு காலும் முடங்கி நடக்கமுடியாமல் முடக்குச் சூலையால் கஷ்டப்படும் அப்துல் அஜீஸ் என்பவரையும் கூட்டிவந்து இன்றையதினம் நேரில் வந்து போட்டோ பிடித்துக் கொடுத்திருக்கிறேன்.

**நத்தர்ஸா ருவுத்தர், 23—8—27**

இவருக்குள்ள குஷ்டரோகம் சொஸ்தமானதைப்பார்த்து ஆச்சரியப்பட்டு எங்களுக்கும் வேண்டிய மருந்துகளை பெற்றுக்கொள்ள நாங்கள் வந்திருக்கிறோம். மேற்படி நத்தர்ஸா ருவுத்தர் சர்ட்டிபிகேட்டை நாங்கள் ஆமோதிக்கிறோம். (Sd) ப. கா. வெள்ளையப்பா ருவுத்தர். சி. சே. மு. பொட்டாகாதர்மீரா உசேன்ராவுத்தர்.



**புடையன் பாம்புகடியால் குஷ்டரோகம் வந்து காலில் குழிப்புண் விழுந்து விரல்கள் எல்லாம் அழுகி இத்து விழுந்து மூக்கு அழுகி ரணமாகிப்போன நிலைமையிலும் சொஸ்தமாயிருப்பதைக் கவனியுங்கள்—**

திண்டுக்கல் பேட்டுப்பட்டி வீரக்கல். எனக்குப் பெண்கொடுத்த மாமனாராகிய முத்துவீரன் சேர்வை மகன் முத்துவீரன் சேர்வை அவர்களுக்கு புடையன் பாம்பு 15-வருஷத்திற்கு முன் வாலால் குத்தியது. அதனால் காலில் ரத்தம் வாவில்லை ஷை பாம்பு கொத்திய இடத்தில் வந்து காலில் குழிப்புண் விழுந்தது; அந்தப் பெருவிரல் பகுதி இத்து மொண்ணையாய்விட்டது. இடதுகால் பவுத்திர விரல் அழுகி இத்து விழுந்து விட்டது. இந்த ரணங்களுடன் மேலெல்லாம் சிட்டை சிட்டையாய் செமமேகப் பத்துகள்ஏற்பட்டிருந்தது. காது, மூக்கு, கை, தாவக்கொட்டை மார்பு இவைகளில் உருண்டைக்கட்டிகளிருந்தது. தீப்பட்டாலும் தெரியாதபடி சொரணையற்றுப் போய்விட்டது. வலது காலில் ஒரு முள் குத்தி ஊடுருவி பொத்து வெளியே பிதுங்கிவிட்டது. அது அவருக்குத் தெரியாதென்றால் எவ்வளவு சரணையற்றும் போயிருந்திருக்கும். அப்பேர்ப்பெற்ற திமிர் உ நீங்கி சொரணையுண்டாகிவிட்டது. கை பத்து விரல்களெல்லாம் வளைந்து ரணமாக இருந்தது. மூஞ்சி வீங்கி மூக்கு ஏனா அழுகி மூக்கைத் தின்றும் மூக்குச் சப்பளிஞ்சும் போய்விட்டது. இந்த நிலைமையில் தங்கள் தாம்பா பஸ்பம் வாங்கி ஒரு மண்டலம் சாப்பிட்டதில் கால் ரணங்களெல்லாம் ஆறிவிட்டது. கை ரணங்களெல்லாம் ஆறிப் புதிய நகம் முளைத்துவிட்டது. காதில் குணுக்குப்போட்டு ஆட்டினால் எப்படி ஆடுமோ அப்படியுள்ள உண்டைக்கட்டிகளும் கரைந்து சப்பென்று வந்துவிட்டது. திமிர் நீங்கி சுறணையுண்டாகிவிட்டது அவருக்குள்ள குஷ்டரோகம் பூராவும் சொஸ்தமாகிவிட்டது ஆகையால் எனக்கிருக்கும் ரத்தகாச ரோகத்திற்கும் நேரில் வந்து மருந்துவாங்கிச் சாப்பிட அவரையும் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறேன்

—சப்பஞ் சேர்வை.

வைத்திய ஆசிரியர்

# R. M. K. வேலுசாமிபிள்ளை

சித்தவைத்தியசாலை, பழநி.

தந்திவிலாசம் — "வேலுசாமி" பழனி.  Tel· Address:—"Veluswamy" Palni.

